கிறுர். இதற்கு ஸாபேக்ஷ ஈசுவரவாதம், என்று பெயர். இது பாதராயணுசாரியரின் மதம். அதாவது சைவாகமம் முதலிய வற்றிலும் சில புராணங்களிலும் ஈசுவரன் நிரங்குச (ஒருவித வரம்புக்கு முட்படாத) ஸ்வதந்திரனென்பதை ஏற்றுக்கொண்டு அதி லீடுபட்டு தன்னிமித்தமாய் தோஷங்களெல்லாம் குணங்களாக நிரூபிக்கப்பட்டிருக்கின்றன. மனிதனுக்கு பூர்ண சுதந்திரத்துடன் காரியம் செய்யும் யோக்யதையில்லை யென்பதினுல் அந்தப் பக்ஷத்தில் ஒரு குறைவுமில்லை. எனவே அவன் ஒருவ்யவஸ்தை (ஒழுங்கு)க்கும் கட்டுப்பட வேண்டியவனுகிறதில்லை. இது மஹா தோஷமாகும் நமது மதத்தின்படி அவ்விதமில்லை. அவயவங்களோடு கூடின சரீரமென்ன, இவனுடைய பூர்வ புண்ய பாபங்களென்ன, உசிததேசம் காலம் என்ன, இவை முதலிய ஸாமக்ரீகள் சேர்ந்திருக்கும்போது இவற்றின் மத்தியில் பரமேசுவரன் ஸர்வஸ்வதந்திரனுய் தன்னிச்சையால் வந்துசேர்ந்து மனிதன் துவக்கிய காரியத்தை நடத்தி முடித்துவைப்பதால் ஈசுவரனை அதிஷ்டாதா (உள்ளிருந்து நடத்துகிறவனென்றும், காரயிதா (செய்விக்கறவன்) என்றும் சொல்லுகிறது. இவ்வகையால் அவன் காரியங்களுக்குக் காரணமாயிருப்பது (ஹேதுத்வம்) பாயும் ஜலம் பாத்திகளிலுள்ள பலவித விரைகளும் முளைப்பதற்குக் காரணமாகிறது போல்தான். எல்லாப் பாத்திகளிலும் ஒரேவிதமான ஜலம் பாய்ந்தாலும் விரைகளின் வகைப்படியே முளைக்கும் பலன்களும் உண்டாவதுபோல் ஈசுவரன் பொதுக் காரணமாய் எல்லாக்காரியங்களையும் நடத்திவைப்பவனுனலும் அவனவனுடைய பிரயத்தினம் முதலியவற்றை யனுசரித்தே அவனவனுடைய காரியங்களும் அவைகளின் பலன்களும் உண்டாகின்றன. ஜீவனும் ஒரு காரியத்தில் தன் புத்தியைக்கொண்டே பிரவிருத்திக்கிறுனுகையால் மற்ற ஸாமக்ரீகளுக்கு நடுவில் இவன் ஸ்வதந்திரனுகவும் விதிநிஷேத சாஸ்திரங்களுக்குக் கட்டுப்பட்டவனுகவும் இருக்கத்தட்டில்லை. இதுதான் ஸ்ரீ கீதையின் உபதேசம்.

அயிஷ்டாநம் தயாகதூ கரணஂவ வ்ருயஷிஷஂ |
விவியாவ வ்ருயக்ஷேஷ்டா தைவஂவேவா த்ருவஞ்சஂ ||

சரீரத்தை சம்பந்தப்படுத்தும் ஒருவஸ்து. செய்கிறவன், பல விதங்களான இந்திரியங்கள் பிராணவாயுவின் பலவித சேஷ்டைகள், ஐந்தாவதான தைவம், இவையெல்லாம் சேர்ந்து ஒரு கருமம் செய்யப்படுகின்றது. என்று. இவ்விடத்தில் ஸ்ரீமத் தாத்பர்ய சந்திரிகையில் அருளிச்செய்யப்படுகிறதாவது?

ஜீவன் ஒரு காரியத்துக்குக் கர்த்தாவாகும்போது தன் அறிவு (ஞானம்) அக்காரியத்தைச் செய்யவேண்டுமென்னும் ஆவல் (சிகீர்ஷை) அதில் முயற்சி (பிரயத்நம்) இவைகளை முன்னிட்டு மற்றும் வேண்டிய கருவிகளையும்கொண்டு பிரவிருத்திக்கிறுகையால் இவன் சுயேச்சையாகச் செய்கிறுகிறுன். இவனுக்கு ஞானம் முதலியவற்றை பரமாத்மா கொடுப்பதால் இவன் பரதந்திரனெனப்படுகிறுன். இவ்விரண்டுக்கும் பரஸ்பரம் விரோதமில்லை. ஏனென்றுல்! பூர்வபக்ஷீ (எதிராளி) சொல்லுகிறபடி பரமாத்மாவின் ஸ்வாதந்திரியம் காற்றும் ஜலமும் வஸ்துக்களை அடித்துக்கொண்டு போவதுபோல் ஜீவனைத் தள்ளிக் காரியம் செய்விப்பதில்லை. அப்படியானுல் ஜீவனைக்குறித்து இதைச்செய், அதைச் செய்யாதே, என்றபடிகளில் சாஸ்திரங்கள் ஒரு கட்டளையையும் விதிக்கமுடியாது அதிக பலசாலியான மற்றெருவனுல் எடுத்துக்கொண்டு போகப்பட்டும் தடுக்கப்பட்டுமிருக்கும் ஒருவனைக் குறித்து நீ நில், நீ போ, என்று எப்படி உத்திரவுசெய்யக் கூடும்? எந்த விஷயத்தில் பரமாத்மா ஜீவனைப் பிரவிருத்திக்கும்படி செய்கிறுனே அதிலிருந்து திரும்ப இவனுல் முடியாதாகையால் அதைச் செய்யாதே, என்று இவனைக்குறிததுத் தடுப்பது (நிஷேதம்) பிரயோஜனப்படாது. அப்படியே எதில் பரமாத்மா இவனைத் தூண்டிக் கார்யம் செய்விப்பதில்லையோ அதில் முயலுவதும் இவனுக்கு அசக்யமானதால் அதைச் செய், என்று கட்டளை (விதி) யிடுவதும் பலனற்றதாய்விடும். இந்தப் பூர்வ பக்ஷம் எல்லா ஸித்தாந்திகளாலும் பேசப்பட்டது. அதின் ஸாராம்சம் இங்கு சொல்லப்பட்டது.

[சாஸ்திரத்துக்கு அவகாசம் (இடம்,)]

இங்கு ஒரு ஸம்சயம் உண்டாகலாம். அதாவது? நிக்கிரஹத்தையும் அநுக்கிரஹத்தையும் தரவல்ல பூர்வ அதிருஷ்டத்

துக்கு ஆளாயிருக்கும் புருஷன் தானே நிக்கிரஹத்துக்கும் அனுக்கிரஹத்துக்கும் உத்தரவாதியாவது பொருந்துமா ?

> நிக்ரஹாऽநுக்ரஹேஶாந ப்ரவர்த்தகாத்ருஷ்ட ப்ரேரித:
> நிக்ரஹாऽநுக்ரஹார்ஹஸ்ஸ்யாத் இதீதம் ப்ரதிபாத்யதே ||

என்று இதற்குப் பொதுவாய்ச் சொல்லப்படும் ஸமாதானத்தின் ஸாராம்சமாவது புருஷன் தன்னுடைய பூர்வ அதிருஷ்டத்தின் மூலமாய் சாஸ்திரத்தை அதிகரிக்கும் (வழிபடும்) தெசையை அடைகிறான். அதினால் இது இந்த புருஷார்த்தத்துக்கு உபாயம் என்று அறிந்துகொண்டு தன் புத்தியினால் அதற்குவேண்டிய திருஷ்ட ஸாமக்ரீகளையும் ஸம்பாதித்துக் கொண்டு அந்த உபாயத்தில் பிரவிருத்திக்கிறான் எனவே சாஸ்திரத்துக்கு இவனிடத்தில் உபயோக மிருக்கிறது, என்று தெரிகிறது. என்று.

> தத்ராதிஷ்டாऽத்ருஷ்டஸித்த ஶாஸ்த்ரவஶ்யத்வஸாதநாத் |
> ஸாதநஸ்ய ததாऽத்ருஷ்ட ஸம்பத்த்யைவ ப்ரவ்ருத்தே ||
> ஸாமக்ர்யா ஸாதநேச்சாந ப்ரதீதேஶ்ஶ்ருத்யா ஸாதநாத் |
> ப்ரவர்த்தேத ததிதா ஶக்த்யா: ஸாவகாஶாऽத்ர சோதநா ||

அதாவது, ஜீவனுக்கு ஸ்வாதந் திரியமாவது, ஒரு காரியத்தில் இழிய சக்தியுள்ளவனுக்கு அதில் இச்சை பிறந்தால் அதை அவன் முடித்துக் கொள்வதில் பிறர்களால் தடுக்கப்படாம லிருத்தல், ஆனபின்பு புருஷப் பிரவிருத்திகளில் காணப்படும் பேதங்களுக்கு அவரவர் அதிருஷ்டங்களின் பேதங்கள் காரணமானாலும் அதே அதிருஷ்டமானது சாஸ்திரத்தை முன்னிட்டுக் கொண்டே வேறு அதிருஷ்டத்தையும் உண்டாக்குகிறது. பூர்வஜன்மத்தில்இப்போது அச்வமேத யாகத்தைச் செய்துவைப்பதற்குக் காரணமான அதிருஷ்டம் பண்ணப்பட்டிருந்தபோதிலும் அது மாத்திரமே இந்த ஜன்மத்தில் மேற்படியாகத்தை முடித்து வைப்பதில்லை. ஆனால் சாஸ்திரத்தைக் கற்று அதனாலுண்டாகும் ஞானம். பலத்துக்காகச் சொல்லப்பட்ட உபாயத்தைச் செய்வதில் இச்சை, அதை முடிக்கும் பிரயத்தினம், இவற்றைக்கொண்டு மற்றும் வேண்டிய ஸாமக்ரீ (வஸ்துகருவி) களையும் சம்பாதித்துக் கொண்டு தான் அந்த அதி

ருஷ்டம் தன் காரியத்தைச் செய்கிறது. அதாவது மேற்படியாகத்தை நிறைவேற்றி வைக்கிறது. இப்படியே பாபத்துக்கு மூலமான அதிருஷ்டமும் சாஸ்திரத்தை அறிந்து நடக்கும் தெசையை யடைந்த புருஷனுடைய புத்தி பூர்வமான பிரவிருத்தியில் சேர்ந்தே தன் காரியத்தைச் செய்கிறது. எனவே எந்தப் பிரவிருத்தியிலும் பொதுவாய் முதலில் ஞானமும் பின்னர் இச்சையும் அதன் மேல் பிரவிருத்தியும் காணப்படுகின்றன. லௌகிக வியாபாரங்களான போஜனம் முதலியவற்றிலும் இதேவரிசையும் நியாயமும் தான். லௌகிகங்களான விதிகளும் (கட்டளைகளும்) நிஷேதங்களும் தடையுத்தரவுகளும்) அந்தந்த விஷயங்களைப் பற்றிய (ஞானம் இச்சை பிரவிருத்தி, இவைகளையுடையவன் திறத்தில் எப்படி உபயோகப் படுகின்றனவோ அவ்விதமே சாஸ்திரங்களின் விதிநிஷேதங்கள் ஜீவன் விஷயத்தில் பிரயோஜன முள்ளவையாகக் குறைவில்லை. இப்படிப் புருஷன் பிரவிருத்தி நிவிருத்திகளில் தடுக்கப்படாத ஸ்வாதந்திரியத்தை யுடையவனென்றால் அவன் இஷ்டப்பட்டால் ஒன்றைச் செய்யலாம் செய்யாமலும் விட்டு விடலாம், என்றதாயிற்று. ஆகையால் ஜீவனுக்கு ஸ்வாதந் திரியமும் ரக்ஷணத்துக்கும் சிக்ஷணத்துக்கும் அவன் அருஹனாயிருப்பதும் யுக்தமாகிறது. ஈசுவரனுக்கு ஒரு ஒழுங்கு மில்லாதவன் (அவ்யவஸ்திதன்) என்னும் தோஷமும் வராது. எல்லாவற்றிற்கும் உள்ளுயிராய் (அந்தர்யாமியாய்) இருந்து எல்லாவற்றையும் தந்தம் காரியங்களில் ஏவுகிறவன் (பிரேரகன்) என்னும் குணமும் ஈசுவரனுக்கு நிலைபெற்றதாகவும் குறையில்லை.

[புராணஸாமரஸ்யம்.]

இப்படி லோகானுபவத்தை யொட்டிச் சொன்ன வ்யவஸ்தைக்கு அனுகுணமாகவே புராணங்களிலும் நிர்வாஹங்கள் காணபடுகின்றன.

நதேவா தண்டமாதாய ரக்ஷந்தி பஶுபாலவத் |
யம்ஹி ரக்ஷிதுமிச்சந்தி புத்த்யா ஸம்யோஜயந்திதம் ||
யமேஷாம் தேவா: ப்ரயச்சந்தி புருஷாய பராபவம் |
புத்திம் தஸ்யாபகர்ஷந்தி ஸோऽவாசீநாநி பஶ்யதி ||

𑌪𑍁𑌣𑍍𑌯𑌂 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌂 𑌵𑌰𑍍𑌧𑌯𑌤𑌿 𑌕𑍍𑌰𑌿𑌯𑌮𑌾𑌣𑌂 𑌪𑍁𑌨𑌃 𑌪𑍁𑌨𑌃 ।
𑌵𑍃𑌦𑍍𑌧𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌃 𑌪𑍁𑌣𑍍𑌯𑌮𑍇𑌵 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑌾𑌰𑌭𑌤𑍇 𑌨𑌰𑌃 ॥
𑌪𑌾𑌪𑌂 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌂 𑌨𑌾𑌶𑌯𑌤𑌿 𑌕𑍍𑌰𑌿𑌯𑌮𑌾𑌣𑌂 𑌪𑍁𑌨𑌃 𑌪𑍁𑌨𑌃 ॥
𑌨𑌷𑍍𑌟𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌃 𑌪𑌾𑌪𑌮𑍇𑌵 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑌾𑌰𑌭𑌤𑍇 𑌨𑌰𑌃 ॥

(மஹாபாரதம் உத்யோகபர்வம் 35-71-74.)

தேவர்கள் பசு மேய்ப்பவரைப்போல் கையில் தடியை வைத்துக்கொண்டு ரக்ஷிக்கப் புறப்படுவதில்லை. எவனைக் காப்பாற்ற வேண்டுமென்று எண்ணுகிறார்களோ அவனுக்குத் தகுந்த புத்தியைக் கொடுக்கின்றார்கள். எவனைத் தேவர்கள் அவமதிக்க நினைக்கின்றார்களோ அவன் புத்தியைக் குறுகும்படி செய்துவிடுகிறார்கள். புத்தி கெடவே அவன் நாசமடைகிறான். புண்யத்தை அடிக்கடி செய்வதினால் ஞானம் விருத்தி யடைகிறது. ஞானத்தில் நிலைபெற்ற மனிதன் மேலும் எப்போதும் புண்யத்தையே செய்கின்றான். பாபமோவென்றால், அதை அடிக்கடி செய்பவனுடைய புத்தியை அழித்துவிடுகிறது. மதிகெட்டவன் மறுபடியும் மேன்மேலும் பாவத்தொழில்களையே செய்து வருகிறான். என்று.

ஸ்ரீ வாஸுதேவனும் கீதையில் அருளிச் செய்வதாவது ?

𑌤𑍇𑌷𑌾𑌂 𑌸𑌤𑌤𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌨𑌾𑌂 𑌭𑌜𑌤𑌾𑌂 𑌪𑍍𑌰𑍀𑌤𑌿𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌮𑍍
𑌦𑌦𑌾𑌮𑌿 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌯𑍋𑌗𑌂 𑌤𑌂 𑌯𑍇𑌨 𑌮𑌾𑌮𑍁𑌪𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 𑌤𑍇 ॥

இப்படி இடைவிடாமல் என்னைப் பிரீதியுடன் பஜிக்கும் யோகிகளுக்கு என்னை யடைவதற்கேற்ற புத்தியோகத்தைக் கொடுக்கின்றேன். என்று.

அப்படி பாரதத்தில் மோக்ஷ தர்மத்தில் சதுர்முகப் பிரும்ஹாவுக்கு பகவானுடைய அம்சத்தின் அனுப்பிரவேசத்தை யுரைக்குமிடத்தில்,

𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑍋 𑌮𑌹𑌾𑌯𑍋𑌗𑍀 𑌶𑍁𑌭𑌾𑌶𑍁𑌭𑌵𑌿𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌃 ।
𑌸𑌸𑌰𑍍𑌜 𑌨𑌾𑌭𑌿𑌜𑌂 𑌪𑍁𑌤𑍍𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌣𑌮𑌮𑌿𑌤𑌪𑍍𑌰𑌭𑌮𑍍 ॥
𑌤𑌤𑌸𑍍𑌸 𑌪𑍍𑌰𑌾𑌦𑍁𑌰𑌭𑌵𑌦𑌥𑍈𑌨𑌂 𑌵𑌾𑌕𑍍𑌯𑌮𑌬𑍍𑌰𑌵𑍀𑌤𑍍 ।
𑌮𑌮 𑌤𑍍𑌵𑌂 𑌨𑌾𑌭𑌿𑌤𑍋 𑌜𑌾𑌤𑌃 𑌪𑍍𑌰𑌜𑌾𑌸𑌰𑍍𑌗𑌕𑌰𑌃 𑌪𑍍𑌰𑌭𑍁𑌃 ॥

सृज प्रजास्त्वं विविधाः ब्रह्मन् सजडचञ्चलाः ।
स एवमुक्तो विधिः चिन्ताव्याकुलमानसः ॥
प्रणम्य वरदं देवं भक्त्या हरिमीश्वरम् ॥
शक्तिर्मे नास्ति देवेश प्रजाः स्रष्टुं नमोऽस्तु ते ।
अप्रज्ञावानहं देव विधत्स्व यदनन्तरम् ।
स एवमुक्तो भगवान् ब्रह्मणा हि तदर्थतः ।
विज्ञयामास विश्वेशः बुद्धिं बुद्धिमतां वर ।
स्वरूपिणी ततो बुद्धि रूपतस्तु हरिं प्रभुम् ।
योगेन चेतनां संयोज्य स्वीयं यायाचेतसा ।
नतारैश्वर्ययोग्याश्च बुद्धिं शक्तियुतां सतीम् ।
उवाच वचनं देवो बुद्धिं देवि प्रधार्यः ।
ब्रह्माणं च विशत्वेति लोकसृष्ट्यर्थसिद्धये ।
तदर्थमीश्वराविष्टा बुद्धिः क्षिप्रं विवेश सा ।
ततस्तं बुद्धिसंयुक्तं पुनस्तं प्राह श्रीहरिः ।
इदानीं वचः प्राह सृजेमा विविधाः प्रजाः ।
बाढमित्येव जग्राह यथाज्ञां शिरसा हरेः ।
यथाऽकरोच्च यद्दृष्टा ब्रह्मा लोकपितामहः ।

மஹாயோகியும் புண்யபாபஸம்பந்தமற்றவனுமான நாராயணன் தன் நாபியி (தொப்புளி) லிருந்து மஹாதேஜஸ்வியான பிரும்ஹா வென்னும் புத்திரனை யுண்டாககினர். பிறகு அவ னெதிரில் தோன்றி, பிள்ளாய்? நீ என் உந்தியிலுதித்தவன். ஜீவ ராசிகளை ஸ்ருஷ்டிக்க வல்லவன். ஆகவே மடையன் முதல் பண் டிதன் வரையிலுள்ள சேதன சேதனங்க ளடங்கிய நானவிதங்க ளான பிரஜைகளை ஸ்ருஷடிப்பாயாக. என்று சொன்னர். அதைக் கேட்ட சதுர்முகன் கவலையினல் மனக்கலக்கங்கொண்டு பகவான் வாக்கியத்தை யனுசரித்து ஸர்வேசுவரனும் வரம் கொடுப்பவனு மான அந்த ஹரியை வணங்கி தேவர்களுக்கெல்லாம் பிரபுவே! தேவரீருக்கு நமஸ்காரம் பிரஜைகளை ஸருஷ்டிக்க எனக்கு சக்தி

ஏது? நான் மதியிழந்தவனானேன். ஆகையால் வேறு நான் எது செய்யலாமோ அதை நியமிக்கவேண்டும், என்று பதிலுரைத்தான். அதன்மேல் ஸர்வேச்வரனான பகவான் மறைந்து புத்தி தேவதையை நினைத்தார். அத் தேவதையும் உருவெடுத்துக் கொண்டு பிரபுவான ஹரியின்முன் தோன்றியது. பகவான் அவளிடத்தில் தன் யோகசக்தியை (ஐச்வர்யத்தை) யும் பிரவேசிக்கச் செய்தார். இப்படித் தன் ஐச்வர்யத்தோடு கூடிய மஹா சக்தியை யுடையவளாக ஆன உத்தமியான அந்த புத்தியைநோக்கி குறையொன்றுமில்லாத அப் பிரபுவானவர் 'அம்மணி லோக ஸ்ருஷ்டிகள் ஸித்திக்கும் பொருட்டு நீ பிரும்ஹாவிடத்தில் பிரவேசிக்கக் கடவாய், என்று நியமித்தார். பிறகு ஈச்வராவேசத்தை யடைந்த அந்த புத்தியானவள் பிரும்ஹாவிடத்தில் வெகு சீக்கிரத்தில் நுழைந்துவிட்டாள். இப்படி புத்தியோடுகூடின பிரும்ஹாவை ஹரியானவர் மறுபடியும் கண்டார். பலவிதங்களான பிரஜைகளை உண்டாக்குவாயாக, என்றும் மறுபடியும் கட்டளையிட்டார். அத்தகைய ஹரியின் ஆணையை இப்பொழுது 'அப்படியே செய்கிறேன், என்று தலைமேற்கொண்டு உலகத்துக்கெல்லாம் பாட்டனும் தர்மமே வடிவுகொண்டவனுமான பிரும்ஹாவானவன் அவற்றை யெல்லாம் 'செய்து முடித்தான், என்று சொல்லப்பட்டிருக்கிறது.

[ஸம்பிரதாயரகஸ்யம்.]

இந்த வசனங்களால் தேவதைகளும் பகவானும் ஜீவர்களை ரக்ஷிக்கவேண்டியிருந்தாலும் சிக்ஷிக்கவேண்டியிருந்தாலும் அவர்களைக் கொண்டு விலக்ஷணமான காரியங்களை செய்விக்கவேண்டியிருந்தாலும் அவர்களுக்கு மோக்ஷங் கொடுக்கவேண்டி யிருந்தாலும் அவர்களுக்கு அவ்வோகாரியங்களுக்கேற்ற புத்திகளைக் கொடுத்து அவற்றின் மூலமாக அவைகளைச் செய்விக்கின்றார்களே யொழிய காற்றும் நீர் பிரவாஹமும் அடித்துக்கொண்டு போகிற மாதிரியாவது பூத பிசாசங்கள் பிரவேசித்து ஆட்டுகிற மாதிரியாவது செய்கிறதில்லை யென்று தெளிவாகிறது.

இந்த உபாக்கியானத்தினால் பிரும்ஹாவேதத்தை இழப்பதும் அதை அவனுக்கு பகவான் மறுபடியும் ஸம்பாதித்துக் கொடுப்

ப்தும் ஆன இத்தகைய கதைகளெல்லாம் விளக்கப்பட்டு விடுகின்றன.

அவதார தசைகளிலும் பகவான் லோகவ்யவஹாரங்களின் வரம்புகளை அதிக்கிரமிப்பதில்லை. இவ்வசனங்கள் அதற்கு பிரமாணம்.

மநஸைவ ஜகத்ஸ்ருஷ்டிம் ஸம்ஹாரம் ச கரோதி ய꞉ |
தஸ்யாரிபக்ஷ க்ஷபணே கியாநர்த்தோ விஸ்தர꞉ |
ததாபி யோ மநுஷ்யாணாம் தர்மஸ்ய அநுவர்த்தநம் |
குர்வந்நிவ பலவதாம் ஸந்திம் ஹீநைர்யுத்தம் கரோத்யஸௌ
ஸாமசாபி ப்ரதாநம் ச ததா பேத ப்ரதர்சநம் |
கரோதி தண்ட பாதம் ச க்வசிதேவ பலாயநம் |
மநுஷ்ய தேஹிநாம் சேஷ்டாம் இத்யேவ மநுவர்த்ததே |
லீலாஜகதஸ்தஸ்ய ஹேதுஸ்தஸ்ய ப்ரவர்த்ததே |
ருஷயோऽபி மஹாயோகீ கீநாச ஜலதர்பய꞉ |
கர்மாண்யாரபதே கர்த்தும் ஸர்வஸ்ய ஜகத꞉ ப்ரபு꞉ |
தேந வஞ்சயதே லோகாந் மாயாயோகேந கேசவ꞉ |
யே தமேவ ப்ரபத்யந்தே ந தே முஹ்யந்தி மாநவா꞉ |

(மஹாபாரதம்-உத்யோக பர்வம். 67-10-75.)

ஸங்கல்ப்ப மாத்திரத்தினாலேயே பிரபஞ்சத்தின் ஸ்ருஷ்டியையும் ஸம்ஹாரத்தையும் செய்யவல்லனான ஸர்வேச்வரனுக்கு எதிரி பக்ஷத்தை அழிக்க யாது பிரயத்தினம் வேணும்? என்றாலும் அவன் மனுஷ்யர்களுக் குறித்தான தர்மங்களையே அநுசரிக்கிறான் பலவான்களோடு சமாதானம் செய்கிறான். தாழ்ந்தவரொடு யுத்தத்தையும் நடத்துகிறான். அப்படியே தந்திரங்கள் செய்ய வேண்டிய விடங்களில் அவற்றையும் தானத்தை உபயோகிக்கத் தக்க விடங்களில் கொடுத்தும் ஆயுதங்களோடு யுத்தம் செய்தும் சில ஸந்தர்ப்பங்களில் பயந்தவன் போல் ஓடியும் இப்படி யெல்லாம் மனிதராய்ப் பிறந்தவர்களின் நடவடிக்கைகளைத் தானும் பின் தொடர்கிறான். பிரபஞ்சவ்யாபார மெல்லாவற்றையும் தன் லீலை

யாக நடத்தும் ஸர்வேச்வரனுக்கு இவையாவும் அவன் சங்கற்ப மாத்திரத்தினுலேயே நடக்கின்றன. எல்லா உலகங்களுக்கும் பிரபுவாய் ஈச்வரனுய் மஹாயோகியாயிருக்கும் அவனும் சில சமயங்களில் துர்பலனுன எளியவனைப்போல் காரியங்களை யபினயிக்கிருன். இவ்விதமாய் அக்கேசவன் தன் மாயாஸங்கல்பத்தினுல் உலகத்தாரை ஏமாற்றுகிருன். இதையறிந்து அந்த பகவானையே சரண மடைகிறவர்கள் மோஹத்தை (புத்தி மாருட்டத்தை) யடையமாட்டார்கள். என்று இவ்வர்த்தம் வைகுண்டஸ்தவத்தில் ஸ்ரீ கூரேசனுல் இப்படியருளிச் செய்யப்பட்டது.

> 𑌰𑍂𑌪𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌪𑌰𑌿𑌣𑌾𑌮𑌕𑍍𑌰𑌮𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌂
> 𑌵𑌿𑌶𑍍𑌵𑌂 𑌵𑌿𑌪𑌰𑍍𑌯𑌵𑌸𑌿𑌤𑍁𑌮𑌨𑍍𑌯 𑌉𑌪𑌸𑍍𑌕𑍃𑌤𑌂 ।
> 𑌕𑍍𑌷𑌾𑌨𑍍𑌤𑍍𑌯𑌨𑍁 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌨𑌿𑌯𑌮𑌂 𑌕𑌿𑌮𑌤𑍀𑌕𑍍𑌷𑍍𑌯𑌸𑍇𑌵𑍍𑌯𑌂
> 𑌸𑍍𑌵𑌾𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑍍𑌯𑌮𑍈𑌶𑍍𑌵𑌰𑌮𑌪𑌰𑍍𑌯𑌨𑍁𑌯𑍋𑌜𑍍𑌯𑌮𑌾𑌹𑍁𑌃 ॥

ஓ பகவானே! உருவம் மாதிரி முதலியவைகளின் மாறுதல்களுக்குதக்கபடி வியவஸ்தை செய்யப்பட்ட இந்த பிரபஞ்சத்தை எதேச்சையாக நிலைமாற்றவோ வேருக்கவோ ஒன்று மில்லாதபடி செய்யவோ சக்தியுள்ள தேவரீர் அந்தவ்யவஸ்தைகள் அப்படியேயிருக்கவேண்டு மென்று கொண்ட தேவரீருடைய நியமத்தைத் தடுக்கவல்லவர் யார்? உம்முடைய ஸ்வாதாந்திரியம் ஒருவராலும் குறுக்கிடப் படக்கூடாத தல்லவா? என்று இந்த சுலோகத்தாலும் லோகஸ்வபாவம் ஒரு நியமத்தை (ஒழுங்கை) உடைத்தானதென்று தெரிவிக்கிறது.

[புருஷப் பிரயத்தினம் முக்கியம்]

இவ்விதமாக அர்த்தம் கொண்டால் கருமங்களுக்கு பலன்களைக் கொடுக்கும் சக்தி உண்டென்றும் தன்னைக் காப்பாற்றிக் கொள்ள வேறு ரக்ஷகர்களைத் தேடவேண்டியதில்லை யென்றும் என்றாலும் ஈசுவரனுக்கு பரதந்திரனுயிருப்பதே மனிதனுக்கு ஸ்வபாவத்தில் ஏற்பட்ட தென்றும் ஸ்ரீ நிகமாந்த மஹாதேசிகன் ஸாதித் திருப்பது யுக்திகளோடு கூடினதாயும் லோக ஸம்மதமாயும் காணப்படு மென்பது நிச்சயம். மேலும்,

[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]

(விஷ்ணுதத்துவம்)

உலகத்தில் வஸ்துக்களின் உத்பத்தி நிலைநாசம் இவற்றைப் பற்றி உனக்கேன் கவலை? உற்பத்தி உண்டான மாதிரியிலேயே இருப்பும் அழிவும் நடக்கின்றன. கைகால்களை அசைக்காமல் ஒரேயிடத்தில் உட்கார்ந்திருக்கும் ஒருவனுக்கு ஐசுவர்யம் வலிய வந்துவிடுகிறது. கர்மங்களிலீடுபட்ட மற்ற ஒருவன் எவ்வளவு வேலைசெய்தும் நக்கிச் சாப்பிடும் பலத்தைக் கூட அடைவதில்லை. ஆகாசத்தில் தான் பறக்கட்டும், பாதாளத்தில் தான் நுழையட்டும் அல்லது பூமி முழுவதும் சுற்றிவரட்டும், எப்படியானாலும் முன் கொடுத்துவைத்ததையல்லது மற்றெதையும் எவனும் அடையான். இவன் ஞானமில்லாத பிராணியொன்றன்றோ? ஒருபடியாலும் ஸ்வதந்திரனல்லன். இவனுடைய ஸுகதுக்கங்கள் இவனதீனங்களல்ல. ஈசுவரனால் ஏவப்பட்டவனாய் ஸ்வர்க்கமும் செல்லலாம். அல்லது படுநரகிலும் வீழலாம். உலகத்துக் காணப்படுபவையெல்லாம் என் ஏவுதலின்படி நடக்கின்றன. மற்றவன் வேறாக நினைக்கலாம். நானேவென்றால் என் ஸங்கற்பப்படியே எல்லாவற்றையும் நடத்துகிறேன், எந்த பிரபுவானவர் என்னை

என்தாயின் கெர்ப்பத்திலும் உணவுகொடுத்துக் காப்பாற்றி ஞரோ அவர் இனிமேல் என் தேஹயாத்திரை நடக்கும் விஷயத் திலும் விழித்திருக்கிருரா ? அல்லது உரங்கி விட்டாரோ? அன்றி இறந்து தான் போனுரோ ?

என்ற இத்தகைய வசனங்களைக் கொண்டு புருஷப் பிரயத்தி னம் ஒன்றுமே வேண்டிய தில்லை அதினுல் பிரயோஜனமுமில்லை. எல்லா வற்றிற்கும் ஈசுவரன் கையைப்பார்த்துக் கொண்டிருப்பது தான் கடமை, என்று அர்த்தம் பண்ணினுல் அதே நியாயத்தைக் கொண்டு நமது சாப்பாடு முதலிய வியாபாரங்களையும் கூடத் தவிற வேண்டிவரும். ஆகையால் எதிலும் புருஷப் பிரயத்தினமே முக்கிய மென்றறியவேண்டும்.

ഉദ്യമേന ഹി സിധ്യന്തി കാര്യാണി ന മനോരഥൈഃ ।
നഹി സുപ്തസ്യ സിംഹസ്യ പ്രവിശന്തി മുഖേ മൃഗാഃ ।

எக்காரியமும் நமது பிரயத்தினத்தினுலேயே ஸித்தி பெற வேண் டும் மனோரதத்தினுல் மட்டும் ஒன்றும் நடவாது. ஸிம்ஹத்துக் கும் அது தூங்கும்போது அதின் ஆஹாரங்களாகிய மிருகங்கள் அதின் வாய்க்குள் வந்து நுழைவதில்லையே? ஆகையால் தான் மனு முதலிய ஸ்மிருதிகர்த்தாக்கள் இப்படிச் சொல்லுகிருர்கள்.

നാത്മാനമവമന്യേത പൂർവാഭിരസമൃദ്ധിഭിഃ ।
ആമൃത്യോഃ ശ്രിയമന്വിച്ഛേന്നൈനാം മന്യേത ദുർലഭാം
യദ്യത്പരവശം കർമ്മ തത്തദ്യത്നേന വർജയേത് ।
യദ്യദാത്മവശന്തു സ്യാത് തത്തത്സേവേത യത്നതഃ ।

இதுவரையில் தனக்கிருந்த எழ்மையைக் கொண்டு தன்னைத் தானே அவமதித்துக் கொள்ளக் கூடாது. பிராணம் போகும் வரையில் ஸ்ரீயை (ஸம்பத்தை)த் தேடக்கடவன், அது நமக்கெங்கு கிட்டப்போகிற தென்று அகலாமல் தன் பிரியத்தினங்களைச் செய் யக் கடவன். ஆனுல் எதெது பராதீனமான காரியமோ அதனைத் தள்ளிவிட வேண்டியது. தன் வசத்திலிருந்து சுதந்திரமாய்ச் செய்யக்கூடியவைகளை விடாமுயற்சியுடன்நாடி முடித்துக்கொள்ள வேண்டும்.

[இதில் நியாயவை சேஷிகர்களின் கொள்கை]

இம்மாதிரி வசனங்கள் ஸ்மிருதி புராணம் முதலியவற்றில் ஆயிரக்கணக்காய்க் காணப்படும். இந்த புருஷப் பிரயத்தின வாதத்தை ஒப்புக் கொண்டால் தான் இவை யெல்லாம் அர்த்த முடையவைகளாக ஆகும். இது சார்வாக மதத்தையும் ஸௌகத (புத்த) மதத்தையும் கண்டித்து (நிரஸித்து) ஆத்மா, என்பது உண்டென்று ஸ்தாபித்துக் கொடுக்கு மென்று தார்க்கிகர்களின் கொள்கை எப்படி யெனில்? லோகத்தில் அசேதந வஸ்துக்களால் நடக்க வேண்டிய காரியங்க ளெல்லாம் சேதனவஸ்துவின் பிரயத் தினத்தினுலேயே நடக்க வேண்டியிருக்கின்றன, என்பது யாவரும் அறிந்த விஷயமன்றோ? ஆகவே ஆத்மாவை ஒப்புக்கொண்டே தீரவேண்டும், என்று, வைசேஷிகர்களுடைய வாதமும் இதை யொட்டியதே. ஒரு காரியத்தினுல் மற்றொரு காரியம் உண்டாகா தென்று அவர்களின் பக்ஷம் நிரூபிக்கப்பட்டிருக்கிறது. அதின் சுருக்கம்.

பு³த்³தி⁴ஜந்யா ப⁴வேதி³ச்சா² இச்சா² ஜந்யா ப⁴வேத் க்ருதி꞉ |
க்ருதி ஜந்யா ப⁴வேச்சேஷ்டா சேஷ்டாஜந்யா ப⁴வேத் க்ரியா |

புத்தியினுல் இச்சை உண்டாகிறது. இச்சையிலிருந்து ஒரு காரியத்தில் பிரவிருத்தி (கிருதி) உண்டாகிறது. கிருதியினுல் அவயவங்கள் வியாபாரங்களும் அவற்றிலிருந்து காரியமும் முறையே சம்பவிக்கின்றன. என்று.

[ஸ்ரீ ராமாநுஜமதத்தில் கர்மஸ்வரூபம்.]

இப்படி புண்யம் பாபம் என்கிற கர்மத்தின் ஸாமர்த்தியம் நிரூபிக்கப்பட்டால் கர்மஸ்வரூபத்தைப்பற்ற அநேகப் பிரகாரங்களான விவாதங்கள் இருந்தாலும் ஸ்ரீராமாநுஜ ஸித்தாந்தத்தில் அவைகளெல்லாம் சமரஸமாகின்றன. இவர் மதத்தில் கர்மஸ்வரூபம் பகவானுடைய ஸங்கல்பவிசேஷம். அவருடையகோபம் என்கிற நிக்கிரஹ (தண்டிக்கும்) ஸங்கல்பத்துக்கு ஆளாவது பாபம். அப்படியே அவருடைய பிரீதி என்கிற அநுக்கிரஹ (அநுகூலம் செய்யும்) ஸங்கல்பத்துக்கு இலக்காவது புண்ணியம்,

இவ்விஷயத்தில் ஸ்ரீபாஷ்யத்தில் ஸ்ரீராமாநுஜர் ஸாதித்திருப்ப தாவது ?

ஜீவாத்மாவின் புண்யபாபரூபங்களான கருமங்களினுலேயே லோகவ்யவஹாரவ்ய வஸ்தைகளெல்லாம் ஸித்திக்கும்போது ஈசுவரன் என்று ஒருவன் வேண்டியதில்லை. புண்யபாபரூபங்களான கர்மங்களினுல் ஸம்ஸ்கரிக்கப்பட்ட (பக்குவம் செய்யப் பட்ட) மூலப்பிரகிருதியே எந்த எந்த புருஷார்த்தத்தை (பலத்தை)க் கொடுக்கவேண்டுமோ அவ்வவ்விதமாக மாறுபாடுகளை அடையலாம். எப்படியென்றுல் ? விஷம் முதலியவற்றுல் கெடுக்கப்பட்ட அன்னபாநுதிகளாலும் நல்ல ஔஷதங்களினுல் பக்குவப்படுத்தப்பட்ட அன்னபாநுதிகளினுலும் முறையே துக்கத்துக்கும் சுகத்துக்கும் காரணமாகக் கூடிய பரிணும (மாறுபாடுகளின்) விசேஷங்கள் அந்ததந்த தேசகாலங்களை யனுசரித்து உண்டாவதைக் காண்கின்றோமல்லவா ? அவ்விதமே ஸ்ருஷ்டி பிரளயம் முதலிய வ்யவஸ்தைகளும் தேவன் மனுஷியன் முதலிய பல வேறுபாடுகளையுடைய ஸ்ருஷ்டியும் அப்படியே மோக்ஷம் என்னும் வ்யவஸ்தையும் எல்லாம் பலபிரகாரங்களாக மாறுதல்களை யடையும் சக்தியையுடைய பிரகிருதியினுலேயே உபபந்நமாகலாமே ? (கூடலாமே ?) என்றுல், இதற்கு சமாதானம் சொல்லுகிறோம். இது புண்ணியபாபங்களின் ஸ்வருபத்தை யறியாதவர்கள் சொல்லும் ஆக்ஷேபம். அது சாஸ்திரத்தினுலேயே அறியப் படவேண்டும். சாஸ்திரமாவது அநுதிஸம்பிரதாயத்தால் வந்திருக்கும் தோஷமற்ற வேதம்தான். அந்த வேதமானது பரம புருஷனுடைய ஆராதனமேபுண்ணியம். அவனிடத்தில் அபசாரப் படுவதேபாபம், என்று தெரியப்படுத்துகிறது. இந்த ஆராதனத்தினுலும் அபசாரத்தினுலும் உண்டாகும் பகவானுடைய அநுக்கிரஹங்களும் நிக்கிரஹங்களும் முறையே நமது சுகதுக்கங்களுக்குக் காரணங்கள். ஸ்ரீ திரமிடாசாரியார்.

ஃலஸம்ஹிதம் விஷீஷதி ஸவஃதொஷஹாய ஐதி ஶாஷுயெஊா |

தங்கள் கருமங்களினுல் பரமாத்மாவைப் பிரீதிசெய்ய முயல்கின்றுர்கள். அவனும் பிரீதியடைந்தவனுய் பலம் கொடுப்பதற்கு

ஷித்தமாகிறுன். இதுதான் சாஸ்திரத்தின் நிலே, என்றருளிச் செய்தார். என்று.

[கர்மக்ஞானங்களின் ஸாமரஸ்யம் பகவத்ஸங்கல்பம்.]

கர்மஸ்வரூபம் இப்படி நிரூபிக்கப்பட்டால்.

ஞாநாக்நிஸ்ஸர்வ கர்மாணி பஸ்மஸாத் குருதே(அ)ர்ஜுந |
நஹிஞாநேந ஸத்ருசம் பவித்ரமிஹ வித்யதே |

ஓ அர்ஜுந ! ஞானமாகிற நெருப்பு கருமங்களெல்லாவற்றையும் சாம்பலாக்கி விடுகிறது. இந்த உலகத்தில் ஞானத்துக்குச் சமான மான சுத்திசெய்யும் வஸ்து வேறு கிடையாது. என்பதுபோன்ற வசனங்கள் பொருத்த முடையவைகளாகின்றன. இங்கு ஞான மாவது பகவானுடைய உபாஸநம் (பூஜை) அதாவது பகவானுக் குப் பிரீதியை உண்டாக்கக்கூடிய வியாபார விசேஷம். இதை பகவத்பரதை (பகவானிடத்திலேயே ஈடுபட்டிருத்தல்) என்றும் நிரந்தர ஏகாந்த சித்தவிருத்தி (இடைவிடாமல் ஒரே நிலேயில் நிற் கும் புத்தியின் நட்பு) என்றும் சொல்லுவார்கள். இதனல் உண் டாகும் பகவானுடைய பிரீதியினல் அநாதிகாலமாய் அவனுக்கு நம் விஷயத்தில் ஏற்பட்டிருந்த கோபம் என்கிற கருமம் அடி யோடு நசித்துவிடும். இதற்கு லோகானுபவமே போதுமான ஸாக்ஷியம். இங்கு ஸ்ரீ பாஷ்யக்காரர் "பாபங்கள் செய்யப்பட் டால் அவை புருஷனுக்கு வைதிக கருமங்களில் யோக்கியதை யில்லாமற் செய்வதுடன் அதைப்போன்ற மற்ற காரியங்களிலும் (பாவத்தொழில்களிலேயே) அதிக ருசியையும் இப்படிப் பலவித கெடுதல்களேயும் உண்டாக்கும். அவைகளே விநாசப்படுத்துவ தாவது, அவைகளுக்கு சக்தியில்லாமற் செய்வதுதான். சக்தி யாவது பரமபுருஷனுடைய அப்பிரீதி (கோபம்) தான். ஆகை யால் உபாஸனேயானது அதைச் செய்யும், ஜீவனுக்கு உபாஸிக் கப்பட்ட பகவான் அளவற்ற பிரீதிக்குப் பாத்திரனுகிறபடியால் பகவான் தானும் அந்த ஜீவன் விஷயத்தில் அளவற்ற அன்போடு கூடினவனுகும்படி செய்து பரமபுருஷனுக்கு ஆராதனரூபமாவ தால் அது ஜீவனல் பூர்வகாலத்தில் சம்பாதிக்கப்பட்ட பகவா னுடைய அப்பிரீதியை (பிரீதியில்லாமையை, கோபத்தை) நாசப்

படுத்தும். வருங்காலத்திலும் ஈசுவரனுக்கு அப்பிரீதிவராமல் தடுக்கும் என்றருளிச்செய்தார். வருங்காலத்திலும் இப்படித் தடை செய்யவும் என்றது மனிதன் புத்தி பூர்வமில்லாமல் அவசமாய்ச் செய்யக்கூடிய பாபங்களைப்பற்றியது. நெஞ்சாறச் செய்யும் தீச் செயல்களின் பலன்களை யனுபவித்தே தீரவேண்டும். அல்லது அவற்றிற்குத் தகுந்தபரிஹாரங்களைச் செய்யவேண்டும். இது அறியத்தக்கது.

உபாஸகனுடைய மரணகாலத்தில் அவன் தாயத்தைப் புத்திரர்க ளடைவார்கள். சத்துருக்கள் அவன் பாபங்களையும் மித்திரர்கள் அவன் புண்யங்களையும் அடைகிறார்கள், என்னும் சுருதி வாக்கியமும் இவ்விதமாகவே பொறுத்தமுடையதாக அறியப்படும். ஒருவன் செய்த பாவத்தை மற்றொருவன் அனுபவிப்பது என்பது முதலியது சரியாகுமோவென்றால், பாகவதர்கள் (பகவானுடைய பிரீதிக்குப் பாத்திரமானவர்கள். பக்தர்கள்) விஷயத்தில் செய்யும் சிநேஹத்தால் பகவானுக்கு பிரீதியும் துவேஷத்தால் கோபமும் வருமென்று இந்த வசனத்துக்கு தாத்பர்யம். இது பித்ருபுத்ர நியாயத்தினால் (புத்திரன் விஷயத்தில் அன்பு முதலியவைகளைக் காட்டும் மனிதர் திறத்தில் தகப்பனுக்கு பிரீதிமுதலியவை உண்டாகும். நியாயத்தினால் தெளிவாகிறது. இப்படியே

श्रुतिः स्मृतिर्ममैवाज्ञा यस्तामुल्लङ्घ्य वर्तते ।
आज्ञाच्छेदी मम द्रोही मद्भक्तोऽपि न वैष्णवः ।

(விஷ்ணுதத்வம். 5-31.)

வேதமும் ஸ்மிருதியும் என் கட்டளைகள். எவன் அவைகளை மீறி நடக்கிறானோ அவன் என் ஆணையைக் கடந்த துரோஹியாவான். என் பக்தனானாலும் வைஷ்ணவன் (என்னையே எல்லாமென்று நினைத்தவன்) ஆகான், என்கிற வசனத்துக்கும் பொறுத்தமான அர்த்தம் காணப்படும்.

கருமமானது பகவானுடைய அனுக்கிரஹம் முதலியவற்றை விட வேறுபட்டதாய் சுதந்திரமாய் சக்தியுள்ளதாகும் பக்ஷத்தில் பகவான் அதற்குட்பட்டு அதை யனுசரித்தே பலன்களைக் கொடுக்கவேண்டியவனாவான். அப்படியானால் அவனைப் பிரார்த்

திப்பதினுல் யாதொரு பிரயோஜனமும் இல்லே. இது நியாய ஸித்தாந்திகளின் நிரனுக்ரஹ ஈசுவரவாதம்என்கிற கொள்கையை ஸ்திரப்படுத்தும்.

அல்லது இத்தகை பகவத் பிரார்த்தனேக்குப் பலனுக ஒரு அதிருஷ்டம், என்று ஒரு சக்தி விசேஷத்தைக் கற்பித்து அதனுல் தடைகளேப்போக்குதல் முதலியவைகளேயும் கற்பிக்கப் புகுந்தாலும் பகவான் கருமத்துக்குப் பராதீனனுயே (உட்பட்டவனுயே) காரியம் செய்யவேண்டியவனுததால் இந்த ஸாபேக்ஷ ஈசுவர வாதத்திலும் பகவான் பரதந்திரன் என்றே ஏற்படும். இதைவிட ஸர்வேசுவரன், என்பவனுக்கு மேலான தோஷம் ஒன்றுமில்லே யென்று ஸ்ரீ நிகமாந்த மஹாதேசிகன் அருளிச்செய்திருக்கிருர்.

ஸாபேக்ஷ பரதந்த்ரஸ்ஸாபேக்ஷ பராதீநதயா ஸ்வதந்த்ர |
பராபேக்ஷ பராதீநஸ்வதந்த்ரைவ ஹேவஸ பர: |

தாழ்ந்தவனுகிய ஜீவாத்மா சிற்சில விடங்களில் தன் அதிருஷ்டத்துக்கு மட்டுமே வசமாகிருன். பரமபுருஷனே வென்ருல் எங்கும் மற்ற எல்லாருடையவும் அதிருஷ்டங்களுக்கும் பாரதீனனுக வேண்டி வரும், என்றதாயிற்று.

இவ்விதமாய் எல்லா மனுஷ்யர்களும் எப்பொழுதும் எங்கேயும் எந்தப் பிரகாரத்தாலும் பகவானுடைய ஸங்கல்பத்தையே எதிர்பார்த்திருக்க வேண்டுமென்று நம்பூர்வாசாரியர்கள் ஸாதித்திருக்கும் வசனங்களுக்கும் தாத்பரியம் விளக்கப்பட்டது. இந்த அபிஸந்தியானது (தீர்ந்த ஞானமும் நம்பிக்கையும்) நிலேநிற்குமாகில் தேஹமே ஆதமா, என்னும் பிரமையும் ஆத்மா தானே ஸ்வதந்திரன். என்னும் மயக்கமும் வேரோடு நசித்துவிடு மென்பது நமது ஸித்தாந்தம்.

[கர்மயோகானுஷ்டானம்]

இவ்வளவால் மனிதன் தன் புத்தி பூர்வமாய் ஸ்வதந்திரனுய்த் தான் இச்சிக்கும் கருமங்களேச்செய்ய யோக்யதையுடையவனென்றும், ஆகையால் அவற்றிற்கு அவன் உத்திரவாதியாகிய அதனுல்

வரும் பலாபலன்களை யனுபவிக்கவேண்டியவனென்றும் இந்தப் பலாபலன்கள் ஸர்வேசுவரனை பகவானுடைய அநுக்கிரஹநிக்சிரஹ ஸங்கல்பங்களினுல் உண்டாகின்றனவென்றும் அந்த ஸங்கல்ப்பமேதான் புண்யபாப ரூபங்களான கருமம் அதிருஷ்டம் என்று சொல்லப்படு பவையென்றும் பகவானுக்குப் பிரீதியையுண்டாக்கும் ஆராதனரூபமான கருமங்களே புண்யங்கள் அவைதான் அநுகூல பலன்களைக்கொடுப்பவை அவனுக்குக்கோபத்தை உண்டாக்கக் கூடிய கருமங்கள் பாவங்கள் அவையே பிரதிகூல பலன்களைக் கொடுப்பவை என்றும் பகவானுக்குப் பிரீதி உண்டாகும்படி செய்யப்படும் கருமங்களினுல் அவன் நம்மை நமது பூர்வ துஷ்கர்மங்களுக்குத் தக்கபடி தெண்டிக்கவேண்டுமென்று செய்திருந்த சங்கற்பம் போக்கிவிடப்படுகிற தென்றும் சொல்லிற்ருயிற்று.

இப்படி பகவத் பிரீதியையே பிரயோஜனமாகக் கோலி பகவானே தான் நமக்குக் கொடுத்த நமது ஆத்மா சரீரம் முதலானவைகளைக்கொண்டு தன் ஆராதனரூபமான நாம் செய்யும் கருமங்களைத் தன்பொருட்டே செய்வித்துக் கொள்ளுகிருன், என்னும் நினைவுடன் நாம் அநுஷ்டிக்கும் காரியத்துக்குக் கருமயோகமென்று பெயர். அதாவது பலத்தில் ஆசை (அபிஸந்தி) கருமத்தில் நமது என்னும் ஒட்டு (ஸங்கம்) நாம் செய்கிரேம் (கர்த்ருத்வம்) என்னும் நினைவு. இவைகளை யொழித்துச் செய்யபபடும் ஸத்கருமங்கள், யோகபுத்தியுடன் இம்மூன்றுவிதத் தியாகங்களுடன் செய்யப்படுமவை என்றபடி. இவைகள்தான் ஸ்ரீகீதையில் நாலாவது அத்யாயத்தில்.

ஜெஹவஜெவா வஸெயஜூ் யொமிநஃ வயு௯பாஸதெ |
ஸ்ரூஹஜ்ஞாவ வஸெயஜூ் யஜ்ஞெஜெநவொ வஜ௯ஹதி |

என்று தொடங்கி விதிக்கப்பட்ட தேவார்ச்சனை, யாகம், தானம், தீர்த்தயாத்திரை, வேதாத்தியயனம், முதலியவைகள். இவற்றில் தனக்கிஷ்டமாய் செய்யக்கூடியதாயிருக்குமொன்றை அங்கி (உடல்) ஆகவைத்து தனக்கு சாஸ்திரங்களினுல் கட்டாயம்செய்யப்படவேண்டுமென்று விதிக்கப்பட்ட நித்தியமாக அனுஷ்டிக்

கத்தக்க (ஸந்தியாவந்தனம் முதலிய) கருமங்களென்ன. கிரஹ ணம் முதலியவிசேஷங்களை (நிமித்தங்களை) யிட்டு அநுஷ்டிக்கத் தக்க கருமங்கள் (நைமித்திகங்கள்) என்ன இவற்றை மேற்படி உடலுக்கு அங்கங்களாகச்சேர்த்து முன்கூறப்பட்ட மூன்றுவித த்யாகங்களுடன் அதை அநுஷ்டித்துவருவதுதான் கருமயோகம்.

[அதின் பலம்.]

இக்கர்மயோகம் ஞானயோகத்தை முன்னிட்டும் அல்லது முன்னிடாதேயும் தியானயோகம், என்கிற பரிசுத்தஜீவனைப்பற் றிய உபாஸனத்தையுண்டாக்கி மேல் பக்தியோகத்துக்கு உறுப் பாகிய ஆத்மாவலோகனம், என்கிற ஜீவாத்மஸாக்ஷாத்காரத்தை (ஜீவாத்மாவைப்பார்ப்பதை)க்கூட்டிவைக்கும். ஞானயோகமா வது, கர்மயோகத்தால் பரிசுத்தமான அந்தக்கரணத்தோடுகூடச் செய்யத்தகுந்த பரிசுத்த ஆத்மாவைப்பற்றிய நிலையானசிந்தனை. இதை வெகு காலம் அனுஷ்டித்துவந்தால் இது தியானயோகத் தையுண்டாக்கி ஆத்மாவலோகனத்தை ஸாதித்துக்கொடுக்கும்.

தியானயோகமென்பது அங்கங்களோடு விரிவாய் ஸ்ரீ பகவத் கீதையில் ஆறுவது அத்தியாயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இந்தவரிசை இரண்டாவது அத்தியாயத்திலேயே விளக்கப்பட் டது.

ஆத்மாவின் உண்மையான ஸ்வரூபத்தையுணர்ந்து பகவான் செய்விக்கிறான் நம்மால் ஒன்றுமில்லை, என்னும் அகர்த்ருத்வ அநுஸந்தானத்துடன் செய்யப்படும் கருமயோகமே ஞானயோக த்தையிடையில் வேண்டாமல் தானே நேராக ஸுகரமாகி (சிரம மின்றி செய்யத்தகுந்ததாகி)யும் காலதாமதமின்றியும் தவறுதல் களுக்குட் படாமலும்செய்து தியானயோகத்தை யுண்டாக்கி ஆத்மாவலோகனத்துக்கு ஸாதனமாகக்கூடும். இப்படிக்கர்ம யோகம் தானே உபயோகப்படும் பிரகாரம் கீதையின் மூன்றுவது அத்தியாயத்தில் சொல்லப்பட்டது. இது தான் எல்லாவற்றிலும் மேலான உபாயமென்றும் எல்லராலும் அனுஷ்டிக்கத்தக்கதென் றும் ஸ்ரீபாஷ்யகாரரின் திருவுள்ளம்.

[ஆத்மஸ்வரூபம்.]

ஆத்மாவின் யாதாத்மியம் (ஆத்மாவின் உண்மையானஸ்வரூபம்) ஆவது? ப்ரத்யக்த்வம், (தன்னைத்தானே அறிந்துகொள்ளும் சக்தி) ஏகத்வம், (ஒரே ஆகாரத்தை உடைத்தாயிருப்பது) அநுகூலத்வம், (தனக்குத்தான் இன்பமாகவேயிருப்பது) பரசேஷைகரஸத்வம் (பகவானுக்கு சேஷமாக அதாவது கருவியாக இருப்பதையே தன்ஸாரமான குணமாக உடைத்தாயிருக்கை) முதலான ஆத்மஸ்வரூபத்தில் உள்ளடங்கிய தர்மங்கள். (குணங்கள்) ஜீவன் நித்தியன் (நாசமற்றவன்) அணு, ஞானமொன்றையே உருவாக உடையவன், தானபேக்ஷிக்கும் ஸர்வகாமங்களையும் ஸாதித்துக்கொள்ளும் சக்தியுடையவன் (ஸர்வகாமா வாப்தி அர்ஹன்) என்பது முதலான சாஸ்திரங்களினால் அறியப்படத்தக்க தர்மங்கள். முன்கூறியபடி ஸ்வரூபநிர்ணயம்பண்ணப்பட்ட ஆத்மாவின் மற்றகுண (விசேஷண)ங்கள். முன்சொல்லப்பட்டவைகளுக்கு ஸ்வரூப நிரூபகதர்மங்கள், என்றும் பின்கூறப்பட்டவைகளுக்கு நிரூபிதஸ்வரூபவி சேஷணங்கள், என்றும் பெயர். ஸ்வரூபத்திலடங்கிய தர்மங்கள் ஸ்வயமாகவே ஆத்மாவுக்குப்பிரகாசிக்கின்றன (ஸ்வயம்பாஸ்யங்கள்) என்றும், தர்மியாகிற ஆத்மாவினாலேயே பிரகாசிக்கின்றன (தர்மிபாஸ்யங்கள்) என்றும் சில ஸம்பிரதாயங்களுண்டு.

ஆத்மஸ்வரூபத்தின் உண்மையை இப்படிக்கொண்டால்தான் மோக்ஷதெசையில் ஜீவர்களுக்குப் பரஸ்பரம்பேதம்ஸித்திக்கும். இல்லாவிட்டால் அத்வைதஸித்தாந்தத்தில்தான் பிரவேசமுண்டாகும்.

ஆகையால் இதை நன்றாயறிந்துகொள்ளவேண்டியது அவச்யமாகிறது.

---

# மூன்றாம் அத்தியாயம்

## ஞானயோகம்.

[கர்மக்ஞானங்கள் பகவதாராதனங்கள்.]

இவ்விதமாய் கருமத்தின் உண்மையை நிர்ணயித்ததினால் நாம் செய்கிற சகல கருமங்களும் பகவானுக்கு ஆராதனமாகி அவனுக்குச் சந்தோஷத்தையுண்டாக்கக் கூடியவைகளாக ஆகும்பிரகாரம் ஸித்தாந்தம் செய்யப்பட்டது. இதைத்தான் பகவானும் ஸ்ரீ கீதையில்,

> 𑌯𑌤𑍍𑌕𑌰𑍋𑌷𑌿 𑌯𑌦𑌶𑍍𑌨𑌾𑌸𑌿 𑌯𑌜𑍍𑌜𑍁𑌹𑍋𑌷𑌿 𑌦𑌦𑌾𑌸𑌿 𑌯𑌤𑍍 ।
> 𑌯𑌤𑍍𑌤𑌪𑌸𑍍𑌯𑌸𑌿 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌤𑌤𑍍𑌕𑍁𑌰𑍁𑌷𑍍𑌵 𑌮𑌦𑌰𑍍𑌪𑌣𑌮𑍍 ।

ஓ குந்தி புத்திரனே! ஜீவனார்த்தமாக லௌகிக வ்யாபாரங்கள் யாவற்றைச் செய்வாயோ. சரீரத்தை தரிப்பதற்காக யாதொரு ஆகாராதிகளை உட்கொள்வாயோ. தானம் தபஸ் என்று பரலோகஸாதனமான காரியங்கள் எவைகளைச் செய்வாயோ, அவைகளையெல்லாம் எனக்கு அர்ப்பணம் பண்ணிவிடு, என்றருளிச் செய்தார். இதில் மனிதனுக்கு ஸ்வபாவத்தினுண்டாவதும், திரவியம் முதலிய பிரயோஜனங்களைப் பற்றவருவதும், சாஸ்திரங்களினால் விதிக்கப்பட்டதும், (ஸ்வபாவப் பிராப்தம், அர்த்தப்பிராப்தம், சாஸ்திரப்பிராப்தம்) என்று பிரித்துச் சொல்லப்பட்ட எல்லாக் கருமங்களையும் பற்றப் பேசப்பட்டது. ஏனென்றால்?

> 𑌨𑌹𑌿 𑌕𑌶𑍍𑌚𑌿𑌤𑍍 𑌕𑍍𑌷𑌣𑌮𑌪𑌿 𑌜𑌾𑌤𑍁 𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑍍𑌯𑌕𑌰𑍍𑌮𑌕𑍃𑌤𑍍 ।
> 𑌕𑌾𑌰𑍍𑌯𑌤𑍇 𑌹𑍍𑌯𑌵𑌶𑌃 𑌕𑌰𑍍𑌮 𑌸𑌰𑍍𑌵𑌃 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌜𑍈𑌰𑍍𑌗𑍁𑌣𑍈𑌃 ।

ஒருவனும் ஒன்றும் செய்யாமல் ஒரு க்ஷணம்கூட இருக்க முடியாது. பிரகிருதி ஸம்பந்தத்தினால் ஸ்வபாவத்தினால் உண்டான குணங்களினால் எல்லாரும் பரவசராகவே வேலைகளைச்செய்யும்படி நடத்தப்படுகிறார்கள், என்று ஸ்ரீ கிருஷ்ணனே அருளிச் செய்தான். ஆகையால் பிரவிருத்தி (செய்தல்) நிவிருத்தி (செய்யாமல்விடுதல்) ரூபங்களான எந்தக்காரியங்களும் சாஸ்திரத்தை

யனுசரித்தும் பலத்தில் இச்சை அபிமானம் கர்த்ருத்வம், இவைகளையொழித்தும், அவைகள் பகவதாராதனங்களாகக்கடவன, என்னும் நினைவுடனும் செய்யப்பட்டால் அவையே மோக்ஷத்துக்கும் ஸ்தானங்களாகின்றன, என்று ஸித்தாந்தம் செய்யப்பட்டதாகிறது. இதனால் திருஷ்டப் பிரயோஜனத்துக்கும் (இந்த லோகத்து பிரயோஜனங்களுக்கும்) குறைவில்லை. சாஸ்திரத்தினால் தடுக்கப்பட்ட காரியங்கள் லோகத்திலும் நிஷித்தங்களாக (தள்ளப்பட்டவைகளாக)த்தான் காணப்படுகின்றன, என்று அறிவது இங்கு அவசியம்.

[மூன்றுவித மார்க்கங்கள்]

பரம புருஷார்த்தத்துக்குறித்தான உபாயத்தைப் பற்றிய சாஸ்திரவிசாரம் ஆதிமுதற்கொண்டு கேவலகர்மமென்றும் கேவலக்ஞானமென்றும் கேவலபக்தியென்றும் முன்றுவகைகளாகப் பிரிந்து நடந்திருக்கின்றன. இவையெல்லாவற்றிற்கும் ஸ்ரீ கீதையிலேயே ஆதாரம் கிடைக்கும்.

[கேவலகர்மம்.]

இவற்றில் கேவலகர்மமார்கத்தையனுசரித்தவர்களுக்கு முன் காலத்தில் கர்மஜடரென்றும் பூர்வ (முற்பகுதி) மீமாம்ஸகரென்றும் கபந்த மீமாம்ஸகர் (மீமாம்ஸையின் உடலை, முண்டத்தை மட்டும் ஆச்ரயித்தவர்) என்றும் பெயர்கள் உண்டு. இவர்கள் வைதிகர்களே (வேதப்பிராமாணயத்தை யொப்பினவர்களே) யாகிலும் இவர்கள்.

வெஷொஷஹாஃ, வெஷாஹாஃ,

(வேதாந்தங்கள் வேதாந்தத்தின்கிளர் நிலங்கள்) என்று ஞானப் பிரதானமானவேத்தின் ஸாரக்ஷேத்திரங்களான உபனிஷத்துக்களை தூஷித்துக்கொண்டு அதின்கர்மகாண்டத்துக்கு மட்டும் பிராமாண்யத்தை அங்கீகரித்துயாகம் முதலிய கருமங்களுக்கே ஐஹிகம் (இந்தலோகத்தது) ஆமுஷ்மிகம் (பரலோக ஸம்பந்தமானது) என்னப்பட்ட ஸகல பலன்களையும் ஸாதித்துக்கொடுக்கும் சக்தியைக்கொண்டார்கள், எனவே, இவர்கள் நினைவில் ஐகாச்ரம்ய

மென்னும் கிருஹஸ்தாச்ரமமே ஸர்வோத்கிருஷ்டமானது. பலத்தில் ஆசையினல் யாகம் முதலியகருமங்களை எப்போதும் அநுஷ்டிப்பவர்களாகையால் இவர்கள் ராகம் (ஆசை)த்வேஷம் (விரோதம்) லோபம் முதலிய பிசாசங்களால் பீடிக்கப்பட்டு சுயநலத்யே தேடுகிறவர்கள், என்று ஸௌகதர் (பௌத்தர்) முதலியவர்களுடைய தூஷணங்களுக்கு முதல் பாத்திரர்களானர்கள். ஸந்யாஸம் முதலிய ஆச்ரமங்கள் குருடன் நொண்டி முதலிய கருமங்கள் செய்ய யோக்கியதையில்லாத புருஷர்களுக்கே ஏற்பட்டதென்றூர்கள். வர்ணுச்ரமவ்யவஸ்தையின்படி லோகயாத்திரையை நடத்திக்கொண்டுயாகம் தானம் ஹோமம் முதலான கருமங்களை நடத்துவதிலேயே ஈடுபட்டிருந்திருந்தார்கள். இவர்களைத்தான் சாந்தோக்ய பிருஹதாரண்ய உபனிஷத்துக்கள் கர்மஜடர்கள் (கருமத்தினல் மதியிழந்தவர்கள்) என்று நிந்தித்தன. இத்தகையவைதிக ஸித்தாந்தம் ராகத்வேஷாதிகளை உண்டாக்குமேயன்றி வைராக்யத்தை உண்டாக்காது. என்றும் கேவலம் ஹிம்ஸாமயமாயிருக்குமென்றும் வேதபாஹ்யர்களும்(வேதத்துக்குப்புறம்பானவர்களும்) ஸௌகதர்களும் நிந்திக்கின்றூர்கள்.

[கேவலக்ஞானம்.]

கேவலஞானமார்க்கத்தைப் பின்யாற்றியவர்கள் உத்தர (பிற்பகுதி) மீமாம்ஸகர், என்றும், ராஹ்ய (தலை) மீமாம்ஸகரென்றும் வ்யவஹரிக்கப்பட்டவர்களாய் வேதத்தில் உபனிஷத்து பாகத்துக்குமட்டும் பிராமாண்யத்தை யொப்புக்கொண்டு கேவலஞானமார்க்கத்தையே மோக்ஷஸாதனமாக ஆச்ரயித்தவர்கள். கீதையில்

த்ரைகுண்ய விஷயா வேதா:

(வேதங்கள் முக்குணங்களைப்பற்றியவைகள்)

யாமிமாம் புஷ்பிதாம் வாசம்

(இப்படிக்காய்க் குதவாத பூவைப்போன்றவாக்குகளைச் சொல்லுகிறவர்கள்) என்ற மாதிரிகளில் சொல்லப்பட்டவாக்கியங்களைக் கொண்டு கர்மத்தை தூஷிப்பவர்கள். ஸந்யாஸமென்கிறமோக்ஷாச்ரமத்தை அத்யாச்ரம மென்னும் ஞானத்துக்குப்பரம உபகார

மென்னும் எண்ணுவார்கள். ராகத்வேஷங்களையொழித்து எல்லா-வற்றிலும் பற்றுதலைக்களைந்து (ஸர்வஸங்கபரித்யாகம்செய்து) பிரபஞ்சத்தின் உபசமத்தையே (ஒழிவையே பரமபுருஷார்த்தமென்று எதிர்பார்ப்பார்கள். அரண்யம் முதலிய நிர்ஜனப்பிரதேசங்களில் வஸிப்பதையே உகப்பார்கள். சாஸ்திரத்தைக்கேட்டல் (சிரவணம்) அதைமனதில் உருபோடுதல் முதலியவைகளில் இடைவிடாத கவனத்தைச் செலுத்தி மஹாமௌனிகளான யோகீச்வரராயிருப்பார்கள். ஜடன் (மந்தன்) ஊமைசெவிடன் குருடன் முதலியவர்களைப்போல் நடந்துகொள்ள நிச்சயிப்பார்கள். இத்தகைய வைதிகர்களின் மார்க்கம்தான் கேவலஞானமார்க்கமென்பது.

[கேவலபக்தி]

கேவலபக்திமார்க்கத்தைப் பின்பற்றியவர்கள் தாந்திரிகர்கள் என்றும் பக்தி நிஷ்டர்கள் என்றும் சொல்லப்படுவார்கள். இவர்கள் முன்கூறப்பட்ட இரண்டுவிதவைதிக மார்க்கங்களையும் ஆதரியாமல் யதேச்ச ஆசாரங்களில் ஈடுபட்டவர்களாய் குத்ஸிதமான அருவருக்கத்தக்க ஸித்திகளாலும் குத்ஸிதமான பிரயோஜனங்களாலும் ஜனங்களைவசீகரித்துக்கொள்வார்கள். வாமாசாரம் ஸமயாசாரம் என்பதுபோன்ற தனிப்பட்ட மார்க்கங்களை அனுசரிப்பவர்கள். கேவலம் தேவதாபக்தியினாலேயே எல்லாவற்றையும் ஸாதித்துக்கொள்ளப்பார்த்து கிருதார்த்தராவோமென்று நிச்சயிப்பவர். வைதிகமார்க்க விதூஷகர்கள், என்று பஹுவித அபவாதங்களுக்குப் பாத்திரராகிறவர்கள். அந்தச்சக்கிர ஆராதநம், பெஹிச்சக்கிர ஆராதனம், விக்கிரஹாராதனம், முதலிய அநேகவித ஆராதனங்களைச் செய்கின்றவர்கள். சிவன், பிரும்ஹா, விஷ்ணு, இந்திரன், உபேந்திரன், முதலான தனித்தனித்தேவதைகளை ஆராதிப்பவர்கள். இவர்களுக்குக் கிரியாயோகநிஷ்டர்களென்று பிரஸித்தமான பெயர் உண்டு. இவர்களுடைய தர்சன பேதங்கள் புராணஸாரத்தில்.

𑌶𑍈𑌵𑌂 𑌚 𑌵𑍈𑌷𑍍𑌣𑌵𑌂 𑌶𑌾𑌕𑍍𑌤𑌂 𑌸𑍌𑌰𑌂 𑌵𑍈𑌨𑌾𑌯𑌕𑌂 𑌤𑌥𑌾 ।
𑌸𑍍𑌕𑌾𑌨𑍍𑌦𑌂 𑌚 𑌭𑌕𑍍𑌤𑌿𑌮𑌾𑌰𑍍𑌗𑌸𑍍𑌯 𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌨𑌿 𑌷𑌡𑍇𑌵 𑌹𑌿 ।

சைவம், வைஷ்ணவம், சாக்தம், ஸௌரம், வைநாயகம், ஸ்காந்தம், என்று பக்திமார்க்கத்தின் மதங்கள் ஆறுவகையாகப் பிறிந்திருக்கின்றன, என்று சொல்லப்பட்டது.

[இப்பிறிவுக்கு சாஸ்திர ஆதாரம்]

ஸ்தூல திருஷ்டியால் (மேற்பார்வையினால்) பார்க்குமிடத்து உபனிஷத்துக்களிலும் பகவத்கீதையிலும் இம்மார்க்கங்கள் தனித் தனியாய் ஸ்வதந்திரங்கள், என்றுகாட்ட பல பிரமாணங்கள் காணப்படுகின்றன! உதாரணமாய் உபனிஷத்துக்களில்

𑌦𑍂𑌰𑌮𑍇𑌤𑍇 𑌵𑌿𑌪𑌰𑍀𑌤𑍇 𑌵𑌿𑌷𑍂𑌚𑍀
𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌯𑌾 𑌚 𑌵𑌿𑌦𑍍𑌯𑍇𑌤𑌿 𑌜𑍍𑌞𑌾𑌤𑌾 |

அவித்யை, கருமம், என்றும், வித்தை, ஞானம், என்றும் பெயர் பெற்ற இவ்விரண்டும் ஒன்றுக்கொன்று வெகுதூரமுள்ளது. தனித் தனிப் பலன்களைக் கொடுப்பவை பரஸ்பரம் விரோதமானவை.

𑌦𑍍𑌵𑍇 𑌵𑌿𑌦𑍍𑌯𑍇 𑌵𑍇𑌦𑌿𑌤𑌵𑍍𑌯𑍇 𑌪𑌰𑌾 𑌚𑍈𑌵𑌾𑌪𑌰𑌾 𑌚 |

பரா, மேற்பட்டது அதாவது ஞானம், என்றும், அபரா, தாழ்ந்தது, அதாவது கருமம், என்றும் இருவகைப்பட்டவித்யைகள் அறியத்தக்கவை.

𑌸𑍋𑌽𑌹𑌂 𑌭𑌗𑌵𑍋 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌵𑌿𑌦𑍇𑌵𑌾𑌸𑍍𑌮𑌿 𑌨𑌾𑌤𑍍𑌮𑌵𑌿𑌤𑍍 |

அத்தகையநான் மந்திரத்தை, கருமத்தை, மட்டும் அறிந்தேனே ஒழிய அர்த்தத்தை, ஞானத்தை அறியவில்லை. இப்படிகளில் பேசப்பட்டது. பகவத்கீதையிலும் இவ்வர்த்தம்,

𑌜𑍍𑌯𑌾𑌯𑌸𑍀 𑌚𑍇𑌤𑍍𑌕𑌰𑍍𑌮𑌣𑌸𑍍𑌤𑍇 𑌮𑌤𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑍍𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨 |
𑌤𑌤𑍍𑌕𑌿𑌂 𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌘𑍋𑌰𑍇 𑌮𑌾𑌂 𑌨𑌿𑌯𑍋𑌜𑌯𑌸𑌿 𑌕𑍇𑌶𑌵 |

கர்மத்தைக்காட்டிலும் ஞானமே மேலானதென்று தேவரீர் எண்ணும் பக்ஷத்தில் ஓ கேசவனே! ஏன் என்னை இந்த கோரமான கருமத்தில் ஏவுகின்றீர்? என்ற அர்ஜுனன் வாக்கியத்தால் வெளியிடப்பட்டது.

கர்மமார்கத்துக்கு முக்கிய விரோதிகள் ஸாங்கியஸித்தாந்திகள். அவர்கள் தெரிந்துகொள்ளவேண்டியதில் முக்கியமானது

பிரகிருதி புருஷவிவேகம் (பிரகிருதியையும் ஜீவனையும் பற்றிய பகுத்தறிவு) என்று ஞானத்துக்கு பிராதான்யத்தை (முதன்மையை)ச்சொல்லுவார்கள். பகவானும் கீதையில் இவ்விஷயத்தை.

த்யாஜ்யம் தோஷவதித்யேகே கர்ம ப்ராஹுர் மநீஷிண: ।

சில ஞானிகள் கருமத்தை தோஷத்தை தள்ளிவிடுகிறமாதிரி தள்ளிவிடவேண்டும் மென்றார்கள், என்று அநுவதித்தார் இதற்கு மூலமான வேதவாக்கியம்.

ந கர்மணா ந ப்ரஜயா தநேந த்யாகேநைகே அம்ருதத்வ மாநசு: ।

கருமத்தினாலுமில்லை, பிரஜையினாலுமில்லை, பணத்தினாலுமில்லை, எல்லாவற்றையும் விடுவதினால்தான், அமிருதத்வம், மோக்ஷம் கிட்டும் என்று சிலர் ஞானிகள் சொல்லுகிறார்கள், என்பது. ஸ்வதந்திரமான ஞானமார்க்கம் கீதையில்.

ஜ்ஞாநாக்நி: ஸர்வ கர்மாணி பஸ்மஸாத் குருதே அர்ஜுந ।
ந ஹி ஜ்ஞாநேந ஸத்ருசம் பவித்ரமிஹ வித்யதே ।

ஞானமாகிற நெருப்பு எல்லாக்கருமங்களையும் சாம்பலாக்கிவிடுகின்றது இந்த உலகத்தில் ஞானத்துக்கு மேற்பட்ட பரிசுத்தியைக் கொடுக்கக்கூடியவஸ்துவொன்றுமில்லை. என்றும் சூசிப்பிக்கப்பட்டது.

இவ்விதமாகவே ஸ்வதந்திரமான பக்திமார்க்கமும் ஸ்தூல திருஷ்டியாகப்பலவிடங்களில் பகவத்கீதையில் காட்டப்பட்டிருக்கிறது. எப்படியென்றால்?

அபி சேத் ஸுதுராசாரோ பஜதே மாமநந்யபாக் ।
ஸாதுரேவ ஸ மந்தவ்ய: ஸம்யக் வ்யவஸிதோ ஹி ஸ: ।
ஸர்வகர்மாண்யபி ஸதா குர்வாணோ மத் வ்யபாஶ்ரய: ।
மத்ப்ரஸாதாத் அவாப்நோதி ஶாஶ்வதம் பதமவ்யயம் ।
மாம் ஹி பார்த்த வ்யபாஶ்ரித்ய யேऽபி ஸ்யு: பாபயோநய: ।
ஸ்த்ரியோ வைஶ்யாஸ்ததா ஶூத்ராஸ்தேऽபி யாந்தி பராம் கதிம் ।
வித்யா விநய ஸம்பந்நே ப்ராஹ்மணே கவி ஹஸ்திநி ।

ஸ்த்ரியோ வைஶ்யாஸ்ததா ஶூத்ராஸ்தேऽபி யாந்தி பராங்கதிம்|
நாஹம் வேதைர்ந தபஸா ந தானேன ந சேஜ்யயா |
ஶக்ய ஏவம் விதோ த்ரஷ்டும் த்ருஷ்டவானஸி மாம் யதா |

மிகவும் கெட்ட ஆகாரங்களையுடையவனானாலும் வேறிடம் செல்லாதமனதுடன் என்னை பஜிப்பானானால் அவனேஸாதுவெனப்படுவான். அவன் நல்வழியில் நடப்பவனன்றோ? என்னை ஆச்ரயித்தவனாய் எல்லாக்கருமங்களையும் எப்போதும்செய்துகொண்டு வருகிறவன் என் அநுக்கிரஹத்தினால் சாசுவதமானதும் அழிவில்லாததுமான பதத்தை அடைவான். ஸ்திரீகள் வைசியர்கள் சூத்திரர்கள் என்றமாதிரிபாபங்களினால் (குறைவுகளினால்) தாழ்ந்த நிலைமைகளையடைந்தவரேயாயினும் என்னை ஆச்ரயிக்கும் பக்ஷத்தில் அவர்கள் எவருமே உத்தமமான கதியையடைவார்கள். வித்யை விநயம் முதலியவைகளையுடையவனென்ன கேவலம் பிறப்பினால் மட்டும் பிராம்மணனாயிருப்பவனென்ன பசுமாடென்ன, யானையென்ன, நாயென்ன, அதைப்புசிப்பவனென்ன இவர்களெல்லாரையும் அறிஞர்கள் சமமாகவே பார்ப்பார்கள். வெறும் வேதாத்தியயனத்தாலும் தபஸினாலும் யாகத்தினாலும் நீ பார்த்தது போல் ஒருவரும் என்னைக் காணமுடியாது. என்று பலவிடங்களில் சொல்லப்பட்டது. இதை விஸ்ரிதக்கவேண்டியதில்லை.

[கீதாசாரியரின் ஸித்தாந்தம்]

இவற்றையெல்லாம்சேர்த்து ஸ்ரீகீதாசாரியன செய்யும் ஸித்தாந்தத்தை இனிக்கவனிப்போம்.

ஏகம் ப்ரமாணமிதரம் த்வப்ரமாணம் பவேதிதி |
நீசா: கலஹமிச்சந்தி ஸந்திமிச்சந்தி ஸாதவ: |

இது ஒன்றுதான் பிரமாணம். மற்றொன்றும் பிரமாணமாகாது. என்று நீசர்கள் பரஸ்பரம் கலஹத்தில் இச்சையுடையவராயிருக்கின்றார்கள். ஸாதுக்களோவென்றால் எல்லாவற்றுக்கும் சேர்க்கையை (சமாதானத்தை)யே இச்சிக்கிறார்கள், என்கிற நியாயப்படி முற்கூறப்பட்டமூன்று மார்க்கங்களுக்கும் அவைகளை யொட்டியவேறு சிலவாதங்களுக்கும் ஸாமரஸ்யத்தை (ஒற்றுமையை)

பகவத்கீதை நிரூபிக்கிறது. எப்படியென்றால்? கருமததாலும் ஞானத்தாலும் உபகரிக்கப்பட்ட பக்தியோகமானது மோக்ஷபரியந்தமான புருஷார்த்தங்களுக்கு உபாயமாகிறதென்றும் அவ்வித பக்தியும்) ஸர்வாந்தர்யாமியாயும் (எல்லாவற்றுக்கும் உயிராயும்) ஸர்வேசுவரனுயுமிருக்கிற பகவான் வாசுதேவனைக் குறித்துச்செய்யத்தக்கதென்றும் கீழ்ச்சொல்லிய மூன்று வழிகளையும் ஒன்றாகச் செய்திருக்கிறது. இந்த நிர்ணயம் தான் தெளிவானது. மற்ற நிர்ணயங்கள் பிராந்திரூபங்கள். என்று,

𑌯𑍋𑌮𑌾𑌮𑍇𑌵𑌮𑌸𑌂𑌮𑍂𑌢𑌃 𑌜𑌾𑌨𑌾𑌤𑌿 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌤𑍍𑌤𑌮𑌂 |
𑌸 𑌸𑌰𑍍𑌵𑌵𑌿𑌦𑍍𑌭𑌜𑌤𑌿 𑌮𑌾𑌂 𑌸𑌰𑍍𑌵𑌭𑌾𑌵𑍇𑌨 𑌭𑌾𑌰𑌤 |

எவன் புத்தி மயக்க மில்லாமல் இவ்விதமாய்ப் புருஷோத்தமனை என்னை யறிகிறானோ, அவன்தான் எல்லாம் தெரிந்தவன். அவனே என்னைத் தன் எல்லாவித பாவங்கள் (நினைவு) களாலும் அடைகிறான். இதனால் பகவான் அருளிச்செய்தார்.

வேதங்கள் ஸ்மிருதிகள் இதிஹாஸ புராணங்கள் முதலிய எல்லா சாஸ்திரங்களும் பகவானுடைய மாஹாத்மியத்தையே நிரூபிக்கின்றனவென்று கீதையில் தெளிவாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது.

𑌵𑍇𑌦𑍈𑌶𑍍𑌚 𑌸𑌰𑍍𑌵𑍈𑌰𑌹𑌮𑍇𑌵 𑌵𑍇𑌦𑍍𑌯𑌃 |
𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌕𑍃𑌦𑍍𑌵𑍇𑌦𑌵𑌿𑌦𑍇𑌵 𑌚𑌾𑌹𑌂 |

வேதங்களெல்லாவற்றாலும் நானே அறியப்பட வேண்டியவனாயிருக்கிறேன். நானே வேதத்தின் பலன்களைக் கொடுப்பவன். அதின் உட்கருத்தை யறிந்தவனும் நானே. என்று இப்படி பகவான் வாசுதேவன் ஸாதித்த அபிப்பிராயமானது வேதவேதாந்த இதிஹாஸாதி சகலசாஸ்திரங்களுக்கும் ஒத்திருக்கின்றதென்பதும் ஸத்துக்களுடைய மனதுக்கு சமாதானத்தையும் சந்தோஷத்தையும் கொடுக்கத்தகுந்ததென்பதும் எல்லாராலும் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது.

[பகவான் எல்லாவற்றையும் பற்றக்காட்டும் ஸாமரஸ்யம்.]

𑌯𑍋 𑌯𑍋 𑌯𑌾𑌂 𑌯𑌾𑌂 𑌤𑌨𑍁𑌂 𑌭𑌕𑍍𑌤𑌃 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌯𑌾𑌽𑌰𑍍𑌚𑌿𑌤𑍁𑌮𑌿𑌚𑍍𑌛𑌤𑌿 |
𑌤𑌸𑍍𑌯 𑌤𑌸𑍍𑌯𑌾𑌚𑌲𑌾𑌂 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾𑌂 𑌤𑌾𑌮𑍇𑌵 𑌵𑌿𑌦𑌧𑌾𑌮𑍍𑌯𑌹𑌂 |

𑌸 𑌤𑌯𑌾 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌯𑌾 𑌯𑍁𑌕𑍍𑌤𑌸𑍍𑌤𑌸𑍍𑌯𑌾𑌰𑌾𑌧𑌨𑌮𑍀𑌹𑌤𑍇 |
𑌲𑌭𑌤𑍇 𑌚 𑌤𑌤𑌃𑌕𑌾𑌮𑌾𑌨𑍍𑌮𑌯𑍈𑌵 𑌵𑌿𑌹𑌿𑌤𑌾𑌨𑍍 𑌹𑌿𑌤𑌾𑌨𑍍 |
𑌯𑍇𑌪𑍍𑌯𑌨𑍍𑌯 𑌦𑍇𑌵𑌤𑌾 𑌭𑌕𑍍𑌤𑌾 𑌯𑌜𑌨𑍍𑌤𑍇 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌯𑌾𑌽𑌨𑍍𑌵𑌿𑌤𑌾𑌃 |
𑌤𑍇𑌪𑌿𑌮𑌾𑌮𑍇𑌵 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌯𑌜𑌨𑍍𑌤𑍍𑌯 𑌵𑌿𑌧𑌿 𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌂 |
𑌅𑌹𑌂𑌹𑌿 𑌸𑌰𑍍𑌵𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌂 𑌭𑍋𑌕𑍍𑌤𑌾𑌚 𑌪𑍍𑌰𑌭𑍁𑌰𑍇𑌵𑌚 |
𑌨𑌤𑍁 𑌮𑌾𑌮𑌭𑌿 𑌜𑌾𑌨𑌨𑍍𑌤𑌿 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑍇𑌨𑌾𑌤𑌶𑍍𑌚𑍍𑌯𑌵𑌨𑍍𑌤𑌿𑌤𑍇 |
𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌚𑌾𑌹𑌂 𑌹𑍃𑌦𑌿 𑌸𑌨𑍍𑌨𑌿𑌵𑌿𑌷𑍍𑌟𑌃
𑌮𑌤𑍍𑌤𑌸𑍍𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌰𑍍𑌜𑍍𑌞𑌾𑌨 𑌮𑌪𑍋𑌹𑌨𑌂𑌚 |
𑌈𑌶𑍍𑌵𑌰𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌹𑍃𑌦𑍍𑌦𑍇𑌶𑍇𑌽𑌰𑍍𑌜𑍁𑌨 𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌿 |

எந்தெந்த பக்தன் எந்தெந்த தேவதாரூபத்தை சிரத்தையுடன் அர்ச்சனை செய்ய இச்சிக்கிறானோ, அவனவனுடைய அந்தந்த சிரத்தையையே நான் அசைவற்றிருக்கும்படி செய்கிறேன். அவனவனும் அவ்வித சிரத்தையோடு கூடினவனாய்த் தன் தேவதையின் ஆராதனத்திலீடுபட்டு அத்தேவதையிடத்தினின்றும் வேண்டும் பலன்களைப் பெறுகிறான். ஆனால் அவை யெல்லாம் என்னாலேயே கொடுக்கப்பட்டவை. வேறு தேவதைகளின் பக்தர்களானாலும் அத்தேவதைகளை சிரத்தையுடன் பூஜிப்பார்களே யாகில் வழியில்லா வழியிலேனும் அவர்கள் என்னைப் பூஜிப்பவர்களே யாகிறார்கள். எல்லா யாகங்களிலும் கொடுக்கப்பட்ட ஹவிஸ்ஸுக்களையும் நானே உண்கின்றேன். அவற்றிற்காகக் கொடுக்கவேண்டிய பலன்களைக் கொடுக்கும் அதிகாரியும் நானே. இப்படி என்னை உண்மையாக அறியாதவர்கள் கீழே நழுவிவிடுகிறார்கள். எல்லாருடைய ஹிருதயத்திலும் நான் நிலைத்திருக்கிறேன். என்னால்தான் நினைவும் ஞானமும் வருவதும் அவை அழிந்துபோவதும் ஸம்பவிக்கின்றன, ஓ அர்ஜுன. ஈசுவரன் எல்லா பூதங்களுடையவும் (பிராணிகளுடையவும்) ஹிருதயத்தில் நிலையாக இருக்கிறான். என்றிப்படிப் பல விடங்களில் விளக்கப்பட்டது. பிறர்களுக்குச் செய்யப்பட்டதை யெல்லாம் தனக்குச் செய்யப்பட்டதாகக் கருதுவது பகவானுடைய உதார குணத்துக்குப்பொருத்தமானது. ஹிரண்யகசுபுவைப்போல் அஸுரஸ்வபரவ முடையவர்கள்,

𑌤𑍍𑌰𑍈𑌲𑍋𑌕𑍍𑌯𑌂 𑌵𑌶𑍇 𑌨𑌿𑌨𑍍𑌯𑍇 𑌸 𑌹𑌿𑌰𑌣𑍍𑌯𑌾𑌵𑌰 𑌦𑌿𑌤𑍇𑌃 𑌸𑍁𑌤𑌃 |
𑌯𑌜𑍍𑌞𑌭𑌾𑌗𑌾𑌨𑍍 𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌂 𑌸𑍍𑌵𑌯𑌂 𑌚 𑌬𑍁𑌭𑍁𑌜𑍇𑌽𑌸𑍁𑌰𑌃 |

அந்த அஸுரன் பிரும்மாவின் வரத்தினல் கர்வம் கொண்டு மூன்று லோகங்களையும் தன் வசமாக்கிக்கொண்டான். தேவதைகளுக்குக் கொடுக்கப்பட்ட யக்ஞ பாகங்களெல்லாவற்றையும்மிகுதியில்லாமல் தானே புஜித்தான், என்றபடியே தானே ஸாக்ஷாத் ஸர்வேசுவரனென்று ஸ்தாபித்துக்கொண்டு எல்லாவற்றையும் தாமே பிறர்க்கின்றி யனுபவிக்க வேண்டுமென்றும் பேராசையோடு கூடி ஸர்வலோகத்தாலும் நிந்திக்கத் தக்கவர்களாக இருப்பார்கள்.

இவ்விதமின்றியே முன் கூறப்பட்டபடி லோக விரோதமில்லாதபடியும் எல்லாரும் ஒப்புக்கொள்ளக்கூடிய பிரகாரத்திலும் ஸித்தாந்த ஸாரம் உபதேசித்தபடியாலும் அதற்குத் தக்கபடி தான் அனுஷ்டித்துக் காட்டியதாலும் அதற்கனுகுணமான மனோபாவத்தையு முடைத்தாயிருந்ததாலும் அவதாரத்தில் மனுஷியர்களோடு தானும் ஒரு மனுஷியன்போலவே யிருந்தாலும் ஸ்ரீ வாஸுதேவன் ஸர்வேசுவரனுகவே காணப்பட்டான், என்று லௌகிக வ்யவஸ்தையை யனுசரித்தும் ஸித்தாந்தத்தை சமர்த்திக்கலாம். ஆகையால்தான்,

𑌨 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌭𑍇𑌦𑌂 𑌜𑌨𑌯𑍇𑌦𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌂 𑌕𑌰𑍍𑌮𑌸𑌙𑍍𑌗𑌿𑌨𑌾𑌂 |
𑌜𑍋𑌷𑌯𑍇𑌤𑍍 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍍 𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌸𑌮𑌾𑌚𑌰𑌨𑍍 |

கருமங்களி லீடுபட்ட அறிவிலிகளான ஜனங்களுக்கு புத்தியின் மாறுட்டத்தை யுண்டாக்கலாகாது.

ஞானியானவன் யோகபுத்தியோடு தன் கருமானுஷ்டானங்களைச் சரிவரச் செய்துகொண்டு அத்தகையவர்கள் எல்லாக்கருமங்களையும் சிரத்தையுடன் நடத்திவரும்படி தூண்டக்கடவன். என்று பகவான் அருளிச்செய்யும்படி யிருந்தது. இந்த வசனம் மற்றதெல்லாவற்றுக்கும் உபலக்ஷணம்(உதாகரணமாகக்கடவது.)

[ஸாங்கிய யோகங்களின் ஸாமரஸ்யம்.]

இப்படியிலேயே ஸாங்கியம் யோகம் என்பவைகளுக்குப் பரஸ்பரமும் வேதாந்தத்தோடும் ஸாமரஸ்யம் ஸ்ரீ கீதையி லருளிச்செய்யப்பட்டது.

𑌲𑍋𑌕𑍇𑌽𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌦𑍍𑌵𑌿𑌵𑌿𑌧𑌾 𑌨𑌿𑌷𑍍𑌠𑌾 𑌪𑍁𑌰𑌾 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌾 𑌮𑌯𑌾𑌽𑌨𑌘 |
𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍋𑌗𑍇𑌨 𑌸𑌾𑌙𑍍𑌖𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑍇𑌨 𑌯𑍋𑌗𑌿𑌨𑌾𑌂 |
𑌸𑌾𑌙𑍍𑌖𑍍𑌯𑌯𑍋𑌗𑍌 𑌪𑍃𑌥𑌗𑍍𑌬𑌾𑌲𑌾𑌃 𑌪𑍍𑌰𑌵𑌦𑌨𑍍𑌤𑌿 𑌨 𑌪𑌣𑍍𑌡𑌿𑌤𑌾𑌃 |
𑌏𑌕𑌮𑌪𑍍𑌯𑌾𑌸𑍍𑌥𑌿𑌤𑌸𑍍𑌸𑌮𑍍𑌯𑌗𑍁𑌭𑌯𑍋𑌰𑍍𑌵𑌿𑌨𑍍𑌦𑌤𑍇 𑌫𑌲𑌂 |
𑌯𑌤𑍍 𑌸𑌾𑌙𑍍𑌖𑍍𑌯𑍈𑌃 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌤𑍇 𑌸𑍍𑌥𑌾𑌨𑌂 𑌤𑌦𑍍𑌯𑍋𑌗𑍈𑌰𑌪𑌿 𑌗𑌮𑍍𑌯𑌤𑍇
𑌏𑌕𑌂 𑌸𑌾𑌙𑍍𑌖𑍍𑌯𑌂 𑌚 𑌯𑍋𑌗𑌂 𑌚 𑌯𑌃 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 𑌸 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 |

தோஷமற்றவனே: இவ்வுலகில் ஸாங்கியம் என்றும் யோகமென்றும் இருவிதமான நடைகளுண்டென்று ஏற்கனவே என்னல் சொல்லப்பட்டது. ஸாங்கியர்கள் ஞானமார்க்கத்தாலும் யோகர்கள் கரும மார்க்கத்தாலும் ஸித்தியைப் பெறுவார்கள். மதியீனர்கள் ஸாங்கியமும் யோகமும் வெவ்வேறென்று பிதற்றுவார்கள். பண்டிதர்கள் அப்படிச் சொல்லார்கள். இவற்றில் ஒன்றையாவது செவ்வையாய்ப் பின்பற்றினவன் இரண்டினுலும் கிடைக்கக்கூடிய பலன்களையும் பெறுவான். ஸாங்கியர்களல் அடையப்படும் ஸ்தானமே யோகர்களாலும் பெறப்படுகிறது. ஸாங்கியம் யோகம் ஆகிய இவ்விரண்டையும் ஒன்றென்று எவன் உணர்கின்றானே, அவனேவிழிகண்ணுள்ளவனுவான் என்று இதில்.

𑌆𑌸𑍍𑌥𑌿𑌤𑌸𑍍𑌸𑌮𑍍𑌯𑌕𑍍

(செவ்வையாய்ப்) பின்பற்றினவன், என்றதினுல் பிரஸித்தர்களான ஸாங்கிய தந்திரிகளும் யோகநிஷ்டர்களும் செவ்வையா யறியாதவர்கள், என்றதாயிற்று.

மேலும் மீமாம்ஸக வைதீகர்கள் அங்கீகரித்த விசுத்தமான கருமமார்க்கம் யோகர்களினுல் பரிஷ்கரிக்கப்பட்டது. மீமாம்ஸகமாகிற யாகஸித்தாந்தத்தில் பரமேசுவரனையும் அங்கீகரித்து அவன் ஸந்தோஷத்தை யுத்தேசித்து எல்லாக் கருமங்களுடையவும் பலத்தை அவனுக் கர்ப்பணம் பண்ணும்படியும அக்கருமங்களின் கர்தருத்வத்தை (செய்பவனுயிருக்கையை) பிரகிருதியின் குணங்களில் (ஸத்வரஜஸ்தமஸ்ஸுகளில்) வைத்து அக்கருமாநுஷ்டானங்களைச் செய்யவேண்டுமென்றும் விவேக கியாதி அப்

பியாஸத்தையும் செய்யவேண்டுமென்றும் உபதேசிக்கப்பட்டதாகத் தெரியவருகிறது.

இவ்விதமாய்ப் பரிசுத்தமான மனதில்

𑌵𑌿𑌵𑍇𑌕𑍋 𑌵𑌶𑍍𑌯𑍀

(தெளிவையுணர்தல்) என்கிற ஸாக்ஷாத்கார முண்டாகுமென்றும் அதனல் சுக்லம் (சுத்தமானது) கிருஷ்ணம் (கலக்கமுள்ளது கருப்பு) என்னப்படும் தர்மங்கள் உண்டாகின்றனவென்றும் தர்மத்தால் பெந்தம் (கட்டு) நிவிருத்தமாய் மோக்ஷம் ஸித்திக்குமென்றும் அவர்களுடைய ஸித்தாந்தம் இருக்கும்படி. இங்கு கருமங்களின் பலம், அவற்றில் பற்று, நாம் செய்தோமென்னும் நினைவு, (பல ஸங்க கர்த்ருத்வங்கள்) இவற்றின் தியாகமே (விடுகையே) ஸந்நியாஸமென்று அபிப்பிராயம். இந்த யோகர்கள் தான் கர்மயோக நிஷ்டர்கள். இவர்களுக்கு இஷ்டமான ஸந்நியாஸத்தையே பகவானும் அங்கீகரித்தான்.

𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑍇𑌃 𑌕𑍍𑌰𑌿𑌯𑌮𑌾𑌣𑌾𑌨𑌿 𑌗𑍁𑌣𑍈𑌃 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌸𑌰𑍍𑌵𑌶𑌃 ।
𑌅𑌹𑌙𑍍𑌕𑌾𑌰𑌵𑌿𑌮𑍂𑌢𑌾𑌤𑍍𑌮𑌾 𑌕𑌰𑍍𑌤𑌾𑌹𑌮𑌿𑌤𑌿 𑌮𑌨𑍍𑌯𑌤𑍇 ।
𑌮𑌯𑌿 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌯𑌾𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌚𑍇𑌤𑌸𑌾 ।
𑌨𑌿𑌰𑌾𑌶𑍀𑌰𑍍𑌨𑌿𑌰𑍍𑌮𑌮𑍋 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌯𑍁𑌧𑍍𑌯𑌸𑍍𑌵 𑌵𑌿𑌗𑌤𑌜𑍍𑌵𑌰𑌃 ।

பிரகிருதியின் குணங்களினல் எங்கும் செய்விக்கப்பட்ட கருமங்களை அஹங்காரத்தினல் மதிமயங்கிய மனிதன் தானே செய்ததாகக் கருதுகிறுன். ஆத்மாவைப்பற்றிய உண்மையான ஞானத்துடன் எல்லாக் கருமங்களையும் என்னிடம் அர்ப்பணம் செய்துவிட்டு பலத்தில் ஆசையையும் மமகாரத்தையும் ஒழித்து மனதில் தாபமற்றவனுய் சண்டையைச் செய்வாயாக என்று இவர்களின் ஸித்தாந்தத்தை அநுவாதம் செய்தான்.

இதற்கு முன்னுல் கருமத்தைச் செய்வதா விடுவதா? என்னும் சங்கைக்கும் பரிஹாரமருளிச் செய்திருக்கிறுன். அதாவது,

𑌤𑍍𑌯𑌾𑌜𑍍𑌯𑌂 𑌦𑍋𑌷𑌵𑌦𑌿𑌤𑍍𑌯𑍇𑌕𑍇 𑌕𑌰𑍍𑌮 𑌪𑍍𑌰𑌾𑌹𑍁𑌰𑍍𑌮𑌨𑍀𑌷𑌿𑌣𑌃 ।
𑌯𑌜𑍍𑌞𑌦𑌾𑌨𑌤𑌪𑌃 𑌕𑌰𑍍𑌮 𑌨 𑌤𑍍𑌯𑌾𑌜𑍍𑌯𑌮𑌿𑌤𑌿 𑌚𑌾𑌪𑌰𑍇 ।

சில அறிஞர்கள் கருமம் தோஷத்தைப்போல் விலக்கத்தக்கது, என்ருர்கள். யாகம் தானம் தபசு முதலிய கருமங்களை விடவே கூடாது. செய்தே தீரவேண்டும், என்று இவ்வித பரிஷ்காரத்தினுல் தான் கர்மயோகத்துக்குக் கேவலம் யோகம், என்னும் வ்யவஹாரம் வந்திருப்பதென்றறியலாம். எப்படியென்ருல்?

ஏஷாதேऽபிஹிதா ஸாங்க்யே புத்திர்யோகே த்விமாம்

ச்ருணு |

ஸாங்கியத்தில் நடக்கவேண்டிய புத்தி உனக்கு இப்படிச் சொல்லப்பட்டது. இனி யோகத்தில் நடையாடவேண்டிய புத்தியைக் கேள். இப்புத்தியுடன் கூடிக் காரியங்களைச் செய்வாயானுல் கருமத்தின் பெந்தத்தை (கட்டை) தூரத் தள்ளி விடுவாய், என்று ஸாங்கியயோக சப்தங்களின் பொருளைப் பகவானே விளக்கினுன். இதனுல் கேவலம் ஸாங்கிய மதத்தினர் கருமங்களை ஸ்வரூபத்தோடு அதாவது செய்வதையே விட்டுவிட வேண்டுமென்னும் பக்ஷத்தையும் யோகமதஸ்தர்கள் அவற்றின் பலன்களைமட்டும் தியாகம் செய்யவேண்டுமென்னும் பக்ஷத்தையும் முறையே ஏற்றுக்கொண்டவர்கள் என்பதும் தெளிவாகிறது. இவ் விரண்டு பக்ஷங்களும் வேதத்திலும் சொல்லப்படுகின்றன.

ந கர்மணா ந ப்ரஜயா தனேன த்யாகேனைகே அம்ருதத்வ மானசு: |

வேதாந்த விஜ்ஞான ஸுநிச்சிதார்தா:

ஸந்ந்யாஸயோகாத் யதய: சுத்தஸத்வா: |

ஓர் சாரரான ருஷிகள் கருமம் பிரஜை தனம் முதலியவைகளை விட்டு தியாகம் (விட்டுவிடுதல்) என்ற ஒன்ருலேயே மோக்ஷத்தை யடைந்தார்கள். அவர்கள் வேதாந்தத்தைத் தீரவிசாரித்து அர்த்தத்தை நிர்ணயித்து ஸந்நியாஸயோகத்தால் யதிகளாய்ப் பரிசுத்தமான ஸத்வகுணத்தைப் பெற்றவர்கள், என்று.

[தியாக ஸந்நியாஸஸாமரஸ்யம்.]

பகவானும் கீதையில் தமது ஸித்தாந்தத்தில் சொல்லப்பட்ட ஸந்நியாஸமென்பது ஸாங்கியமதத்தில் கூறப்பட்டதியாகம்

தான், என் றுபதேசித்தான். கரும்ஸ்வரூபத்துககுப் பரித்தியாகம் (விடுதல்) என்பதே கிடையாது. அதாவது கருமத்தைச் செய்யாம லிருக்கலாகாது, என்று திருவுள்ளம்.

அநாஸ்ரித꞉ கர்மபலம் கார்யம் கர்ம கரோதிய꞉ ।
ஸ ஸந்ந்யாஸீ ச யோகீ ச ந நிரக்நிர்ந சாக்ரிய꞉ ।

பலத்தில் இச்சையில்லாமல் செய்யவேண்டுமென்று விதிக்கப்பட்ட கருமங்களைச் செய்பவனே ஸந்நியாஸியும் யோகியுமாவான் அக்னிகாரியங்களை விட்டவனும் மற்றும் ஒரு காரியமும் செய்யாதவனும் அப்படியாகமாட்டார்கள். இம்மாதிரியானவசனங்களினுல் பல விடங்களில் பகவான் ரஹஸ்யார்த்தங்களைச் சொல்லியிருந்தும் அது வெளிப்படையாகத் தெளிவதற்காக மறுபடியும் அர்ஜுனன் வினவுகின்றான்.

ஸந்ந்யாஸஸ்ய மஹாபாஹோ தத்த்வமிச்சாமி வேதிதும் ।
த்யாகஸ்ய ச ஹ்ருஷீகேச ப்ருதக்கேசிநிஷூதந ।

மஹாபாஹுவே! ஹ்ருடிகேசனே! கேசியை முடித்தவனே! தேவரீரிடமிருந்து ஸந்நியாஸத்தினுடையவும் தியாகத்தினுடையவும் உண்மைகளைத் தனித்தனியா யறிய விரும்புகிறேன். என்று.

இதற்கு பகவான் சொல்லும் உத்தரம்.

நியதஸ்ய து ஸந்ந்யாஸ꞉ கர்மணோ நோபபத்யதே ।
மோஹாத்தஸ்ய பரித்யாகஸ்தாமஸ꞉ பரிகீர்த்தித꞉ ।

அவசியம் செய்யப்பட வேண்டியவை, என்று விதிக்கப்பட்ட கருமங்களை விடுவதென்பது ஒருபடியாலும் பொருந்தாது. மதியீனத்தால் அவைகளைச் செய்யாமலிருப்பது தமோகுணம் தலையெடுத்துவிட்டதாகும், என்றருளிச்செய்தான். இதனுல் முன் சொன்ன அர்த்தத்தையே விவரித்ததாயிற்று. இந்த அபிப்பிராயம் எல்லா பாஷ்யகாரர்களாலும் ஒப்புக் கொள்ளப்பட்டது.

இவ்விதம் ஞானமார்க்கத்தை ஸாங்கியமென்றும் கர்மமார்க்கத்தை யோகமென்றும் நிர்ணயிக்கப்பட்டதைத் திருவுள்ளம் பற்றி ஸ்ரீநிகமாந்த மஹாதேசிகன்,

𑌤𑌤𑍍𑌰 𑌪𑌰𑌿𑌶𑍁𑌦𑍍𑌧𑌾𑌤𑍍𑌮𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌚𑌿𑌨𑍍𑌤𑌨𑌾𑌤𑍍𑌮𑌕𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍋𑌗𑌪𑍍𑌰𑌤𑌿
𑌪𑌾𑌦𑌕𑌂 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌂 𑌸𑌾𑌙𑍍𑌖𑍍𑌯𑌂 । 𑌸𑌮𑌾𑌧𑌿𑌪𑌰𑍍𑌯𑌨𑍍𑌤𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗
𑌨𑌿𑌷𑍍𑌠𑌂 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌂 𑌯𑍋𑌗𑌂 ।

அதில் பரிசுத்தமான ஆத்மஸ்வரூபத்தைச் சிந்திப்பதாகிய ஞான யோகத்தைச் சொல்லும் சாஸ்திரம் ஸாங்கியம், ஸமாதி பரியந்தமான கர்மயோகத்தில் நிலைபெற்ற சாஸ்திரம் யோகம், என்று

[இது அநாதி ஸம்பிரதாயம்.]

இப்படிக் கேவல விசாரத்தை மட்டும் முன்னிட்டு ஸித்தாந்தத்தை நிரூபித்தால் அநாதி காலமாய் வந்திருக்கும் இந்த வைதிக ஸித்தாந்தமும் அவைதிக ஸித்தாந்தங்களைப்போல் ஆதரிக்கத் தகாததாக ஆகலாமே? என்றால், இந்த சங்கைக்குப் பகவானே கீதையில் நாலாவது அத்தியாயத்தில் ஸமாதானம் அருளிச் செய்திருக்கிறார் அதாவது:

𑌇𑌮𑌂 𑌵𑌿𑌵𑌸𑍍𑌵𑌤𑍇 𑌯𑍋𑌗𑌂 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌵𑌾𑌨𑌹𑌮𑌵𑍍𑌯𑌯𑌂 ।
𑌵𑌿𑌵𑌸𑍍𑌵𑌾𑌨𑍍 𑌮𑌨𑌵𑍇 𑌪𑍍𑌰𑌾𑌹 𑌮𑌨𑍁𑌰𑌿𑌕𑍍𑌷𑍍𑌵𑌾𑌕𑌵𑍇𑌽𑌬𑍍𑌰𑌵𑍀𑌤𑍍 ।
𑌏𑌵𑌂 𑌪𑌰𑌂 𑌪𑌰𑌾 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌮𑌿𑌮𑌂 𑌰𑌾𑌜𑌰𑍍𑌷𑌯𑍋 𑌵𑌿𑌦𑍁𑌃 ।
𑌸 𑌕𑌾𑌲𑍇𑌨𑍇𑌹 𑌮𑌹𑌤𑌾 𑌯𑍋𑌗𑍋 𑌨𑌷𑍍𑌟𑌃 𑌪𑌰𑌂𑌤𑌪 ।
𑌸 𑌏𑌵𑌾𑌯𑌂 𑌮𑌯𑌾 𑌤𑍇𑌽𑌦𑍍𑌯 𑌯𑍋𑌗𑌃 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌃 𑌪𑍁𑌰𑌾𑌤𑌨𑌃 ।
𑌭𑌕𑍍𑌤𑍋𑌽𑌸𑌿 𑌮𑍇 𑌸𑌖𑌾 𑌚𑍇𑌤𑌿 𑌰𑌹𑌸𑍍𑌯𑌂 𑌹𑍍𑌯𑍇𑌤𑌦𑍁𑌤𑍍𑌤𑌮𑌂 ।

இந்த அழிவற்ற யோகமானது முதலில் விவஸ்வானுக்கு என்னாலுபதேசிக்கப்பட்டது. விவஸ்வான் மனுவுக்கும் மனு இக்ஷ்வாகுவுக்கும் முறையே இதை உபதேசித்தார்கள். இப்படிப் பரம்பரையில் வந்த இந்த யோகத்தை ராஜரிஷிகள் நன்றாய் அறிந்திருந்தார்கள். அத்தகையது வெகு காலங்கள் கடந்ததின் பயனாக நஷ்டமாய்விட்டது. புராதனமானதும் உத்தம ரஹஸ்யமுமான அதே யோகம் இன்று உனக்கு நீ என் பக்தனும்சகாவு மானபடியால் என்னால் உபதேசிக்கப்பட்டது, என்று. அப்படியே ஸ்ரீ பாகவதத்திலும் (11-ஸ்க-அத்.)

𑌕𑌾𑌲𑍇𑌨 𑌨𑌷𑍍𑌟𑌾 𑌪𑍍𑌰𑌲𑌯𑍇 𑌵𑌾𑌣𑍀𑌯𑌂 𑌵𑍇𑌦𑌸𑌂𑌜𑍍𑌞𑌿𑌤𑌾 |
𑌮𑌯𑌾𑌦𑍌 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍇 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌾 𑌧𑌰𑍍𑌮𑍋 𑌯𑌸𑍍𑌯𑌾𑌂 𑌮𑌦𑌾𑌤𑍍𑌮𑌕𑌃 |
𑌤𑍇𑌨 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌾 𑌸𑍍𑌵𑌪𑍁𑌤𑍍𑌰𑌾𑌯 𑌮𑌨𑌵𑍇 𑌪𑍂𑌰𑍍𑌵𑌜𑌾𑌯 𑌸𑌾 |
𑌤𑌤𑍋 𑌭𑍃𑌗𑍍𑌵𑌾𑌦𑌯𑍋𑌽𑌗𑍃𑌹𑍍𑌣𑌨𑍍 𑌸𑌪𑍍𑌤 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌮𑌹𑌰𑍍𑌷𑌯𑌃 |
𑌤𑍇𑌭𑍍𑌯𑌃 𑌪𑌿𑌤𑍃𑌭𑍍𑌯𑌸𑍍𑌤𑌤𑍍𑌪𑍁𑌤𑍍𑌰𑌾 𑌦𑍇𑌵𑌦𑌾𑌨𑌵𑌗𑍁𑌹𑍍𑌯𑌕𑌾𑌃 |
𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌾𑌸𑍍𑌸𑌿𑌦𑍍𑌧𑌗𑌨𑍍𑌧𑌰𑍍𑌵𑌾𑌃 𑌸𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌧𑌰𑌚𑌾𑌰𑌣𑌾𑌃 |
𑌕𑌿𑌂𑌦𑍇𑌵𑌾𑌃 𑌕𑌿𑌨𑍍𑌨𑌰𑌾 𑌨𑌾𑌗𑌾 𑌰𑌕𑍍𑌷 𑌕𑌿𑌂𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌦𑌯𑌃 |
𑌬𑌹𑍍𑌵𑍍𑌯𑌸𑍍𑌤𑍇𑌷𑌾𑌂 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌯𑌃 𑌰𑌜𑌸𑍍𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌤𑌮𑍋𑌭𑍁𑌵𑌃 |
𑌯𑌾𑌭𑌿𑌰𑍍𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌭𑌿𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌪𑌤𑌯𑌸𑍍𑌤𑌥𑌾 |
𑌯𑌥𑌾𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌂 𑌚𑌿𑌤𑍍𑌰𑌾 𑌵𑌾𑌚𑌸𑍍𑌸𑍍𑌰𑌵𑌨𑍍𑌤𑌿 𑌹𑌿 |
𑌏𑌵𑌂 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌵𑍈𑌚𑌿𑌤𑍍𑌰𑍍𑌯𑌾𑌦𑍍𑌭𑌿𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌮𑌤𑌯𑍋 𑌨𑍃𑌣𑌾𑌮𑍍 |
𑌪𑌾𑌰𑌂𑌪𑌰𑍍𑌯𑍇𑌣 𑌕𑍇𑌷𑌾𑌂𑌚𑌿𑌤𑍍 𑌪𑌾𑌷𑌣𑍍𑌡𑌮𑌤𑌯𑍋𑌽𑌪𑌰𑍇 |

வேதமென்னப்பட்ட இந்த வாக்கானது வெகுகாலங்கடந்து பிரளயத்தில் நஷ்டமாய்விட்டது. என் தர்மத்தையே உருவமாக வுடைய லக்ஷ்மியினல் ஆதியில் அது பிரும்ஹாவுக்குச் சொல்லப் பட்டது. அவரால் தன் மூத்த குமாரனாகிய மனுவுக்கு அது உபதேசிக்கப்பட்டது. பின்னர் பிருகு முதலிய ஏழு பிரும்ஹ ரிஷிகள் மனுவினிடத்திலிருந்தும் அவர்களிடமிருந்து அவர்கள் பிள்ளைகளாகிய தேவர் தானவர் குஹ்யர் முதலியவர்களும், மேல் மனிதர்கள், ஸித்தர்கள், கந்தர்வர்கள், வித்யாதரர், சாரணர், கிந்தேவர், கின்னரர், நாகர், யக்ஷர், கிம்புருஷர் முதலானவர் களும் முறையே கிரஹித்தார்கள். ரஜஸ் ஸத்வம் தமஸ் என்னும் குணங்களின் காரணங்களினல் பிராணிகள் பிரிந்திருக்கிறமாதிரி யே அவர்களுடைய ஸ்வபாவங்களும் வெவ்வேறு விதங்களாக விருந்தன. அவரவர்கள் ஸ்வபாவங்களுக்குத் தக்கபடி அவரவர் கள் வார்த்தைகளும் வெகு விசித்திரங்களான பிரவாஹங்களாகப் பெருகின. இப்படி ஸ்வபாவத்தின் ஆச்சிரியபேதங்களினல் மனி தர் புத்திகளும் வேறுபடுகின்றன. சிலரிடத்தில் பரம்பரையாக இப்பேதங்கள் உள. மற்றையவர் நாஸ்திக புத்தியையுடையவரா யும் ஆனர்கள், என்று விரிவாகச் சொல்லப்பட்டது. இப்படிப் பிரபஞ்ச சக்கிரம் அனதியாகச் சுழன்றுவருவதால் புதியது,

பழையது என்னும் வ்யவஹாரத்துக்கே இடமில்லை. இது அற்ப ஞானத்தைப் படைத்தவர்களின் பேச்சேயன்றி மிகக் கற்றவரின தல்ல. இவர்களுக்கு மந்தர்களின் வார்த்தை ஆச்சரியத்தையு முண்டாக்காது.

[கீதை பாஞ்சராத்திரத்தின் ஸாரம்.]

இத்தகைய உபதேசங்களைப் போதிக்கும் ஸ்ரீ கீதையானது பாஞ்சராத்ர சாஸ்திரத்தின் ஸாரமென்றும் அப்பாஞ்சராத்திரம் தானும் ஏகாயனமெனப்படும் வேதத்தையே மூலமாக உடைய தென்றும் மஹாபாரதம் மோக்ஷ தர்மத்தில் 347—349-வது அத்தியாயங்களில் ஸ்பஷ்டமாக கிருஷ்ண த்வைபாயனசார்ய(வ்யாஸ) ரால்வெளியிடப்பட்டது.

ஏவமேஷ மஹாந்தர்ம்மஸ்தே பூர்வம் ந்ருபோத்தம |
கதிதோ ஹரிகீதாஸு ஸமாஸவிதிகல்பித: |
ஸமுபோடேஷ்வநீகேஷு குருபாண்டவயோர்ம்ருதே |
அர்ஜுநே விமநஸ்கே ச கீதா பகவதா ஸ்வயம் |

ஓ நரோத்தமனே! உனக்கு இப்படிச் சுருங்கச் சொல்லப்பட்ட இந்த மஹா தர்மமானது முன்னர் குருபாண்டவ ஸைநியங்கள் போர்க்களத்தில் கூடினபிறகு அர்ஜுனன் கோழைமனதை யடைந்தவளவில் அவனுக்கு பகவான் தன்னாலேயே உபதேசிக்கப் பட்டது என்பது முதலியன கவனிக்கத்தக்கவை. எல்லா அவை திக ஸித்தாந்தங்களும் வைதிக ஸித்தாந்தங்களும் இப்பொழு தும் படிக்கப்படும் உபனிஷத்துக்களிலேயே அநுவாதம் பண் ணப் பட்டும் நிரஸிக்கப்பட்டு மிருக்கின்றன. பிராணி ஸமூஹம் அநாதியாகையால் அதையனுசரித்து அபிப்பிராய பரம்பரை களும் ஏற்றச்சால் மூழுகி எழுந்திருக்கும் கிரமத்தில் மறைந்தும் பிரகாசித்தும் மாறி மாறி வருகின்றன. ஆதலால் நூதனம் புராதனம், என்னும் நினைவுகளைக்கொண்டு ஒன்றை ஆதரிப்பதும் மற்றொன்றை அனாதரிப்பதும் சரியல்ல. அப்படிச் செய்வதற்கு ஆதாரமு மில்லை.

இங்கு ஒரு மதத்தை அதன்விஷயமான கிரந்தத்தைச் செய்தவரின் பெயரால் சொல்லுவது வியவஹார ஸௌகரியத்துக்காகவும் அத்தகைய வருடைய அங்கீகரத்தைப் புகழுவதற்க்காகவும் அல்லது பாணிநீ முதலியாரைப்போல் அன்னரால் பிரவசனம் செய்யப்பட்டது, என்பதை வெளிப்படுத்து வதற்காகவும் தான். இவ்வளவைக்கொண்டும் முன்பின் விஷய ஸந்தர்ப்பங்களை வைத்துக்கொண்டும் விசாரங்களைச் செய்வது ரஸிகர்களுக்குத்தப்பாகத் தோன்றுது.

இந்தப்பிரகாரம் பகவத்கீதையில் காணப்பட்ட தத்துவ விஷயமான தேவதைகளைப் பற்றிய விரோதமும், ஹித(உபாய) விஷயமான தியாகம் சந்நியாாசம் இவைகளைப்பற்றச் சொல்லக் கூடிய .விரோதமும் சமாதானம் பண்ணப்பட்டன. இவ்விதமாகவே வர்ணாச்ரமங்களைப் பற்றிய விரோதமும், வா தாவ டுண டு ஜயாவஸ்ருஷ்டு (நான்குவித வர்ணங்களையுடைய பிரஜை என்னால் சிருஷ்டிக்கப்பட்டது) என்பது முதலியவைகளாலும் பரிஹரிக்கப்பட்டது. இப்படியே மற்றும் பலவிரோதங்களின் உபசமமும் ஸ்ரீ கீதையில் காணப்படும்.

[இதுவே ஸ்ரீ ராமாநுஜ ஸித்தாந்தம்]

இப்படி பகவான் வாசுதேவனால் உபதேசிக்கப்பட்டும் பின்னால் வேதாசார்யரால் (ஸ்ரீ வேதாந்த தேசிகனால்) விசதம் பண்ணப் பட்டதுமான ஸாமரஸ்ய மார்க்கத்தை அவலம்பித்தே ஸ்ரீ ராமானுஜ பகவானால் விசிஷ்டாத் வைதஸித்தாந்தம் ஸ்தாபிக்கப்பட்டது. இது ஸ்ரீ பாஷ்யத்தில் 2-2-42 இவ்விதமாக வெளியிடப்பட்டது.

வனவமெகைம் ஸாங்க்யயோகம் வெதாரண்யக மெவ ச |
வரஸ்வராங்காநெ்யதாநி வஞ்சராத்ரஞ்ச கய்யதெ |

என்றுமோக்ஷ த ்மத்தில் வேதவ்யாசர் அருளிச் செய்தார். இதனர்த்தம் ஸாங்கிய மென்னும் யோகமென்னும் வேதமென்றும் ஆரண்யக மென்றும் இந்நான்கும் பரஸ்பரம் அங்கபாவத்தை யடைந்து ஒரே தத்துவத்தைப் பிரதிபாதிக்க ஏற்பட்டவை

யாகையால் இவையெல்லாம் ஒன்று சேர்ந்த சாஸ்திரத்துக்குப் பஞ்சராத்திரம், என்று பெயர் வந்தது என்று, எப்படியென்றால்? சாங்கியரால் சொல்லப்பட்ட (25) தத்துவங்களேயும் யோகருடைய யமம் நியமம் முதலிய (8) அங்கங்களோடு கூடின யோகத்தையும் வேதத்தில் சொல்லப்பட்ட யாகம் முதலிய கர்ம ஸ்வரூபங்களேயும் அங்கீகரித்து, தத்துவங்களெல்லாம் பிரும் மாத்மகங்கள் (பிரும்மத்தைஉள்ளுயிராக உடையவைகள்) என்றும், யோகத்துக்கு பகவானே விஷயம் (பகவானைக்குறித்தே செய்யத் தகுந்தது) என்றும், வைதிக கர்மங்களெல்லாம் பகவானுக்கு ஆராதனங்கள், என்றும் சொல்லிக்கொண்டு பிரும்ஹ ஸ்வரூபத்தை ஆரண்யங்கள் வெளியிடுகின்றன. இந்த அம்சமே பரப் பிருஹ்ம்மமான நாராயணன் தன்னுலேயே பஞ்சராத்திரசாஸ்திரத்தில் விவரிக்கப்பட்டது. சாரீரக (வேதாந்த) சாஸ்திரத்திலோவென்றால்? இதரசாஸ்திரங்களில் சொல்லப்பட்ட சகல தத்துவங் (வஸ்துக்) களும் பிரும்மாத்மகமென்று நிரூபிக்கப்பட்டிருக்கிறது. என்று இந்தப்பிரகாரம் ஸ்ரீபாஷ்யத்தில் சகல சாஸ்திரங்களுக்கும் பொருத்தமாயுள்ள சாம ரகசியம்பிரகாச மாகிறது. இங்கே யோக மென்றால் பரப்பிரும்ம உபாஸநம், என்னப்பட்டது. அதுதான் மோக்ஷஸாதனமான பக்தியோகம். இதுமேலே விவரிக்கப்படும்.

முன் சொன்ன எட்டுவிதமான யோகங்களில் பக்தியோகமே அங்கி, மற்றவைகள் படிப்படியாக இதற்கு அங்கங்களானவை, என்பதும் இந்த ஸாமரஸ்ய ஸித்தாந்தத்தை யொட்டியது. மேற்பார்வைக்கு அவை ஒவ்வொன்றும் தனித்தனி உபாயங்களாகக் காணப்படலாம். ஆனால் அப்படியல்ல. அப்படி நினைத்தால் மோக்ஷோபாயங்களில் விகற்பம் (தனித்தனி சுதந்திரமார்க்கம்) என்பதுபோன்ற பலதோஷங்கள் உண்டாகுமென்று சாஸ்திரகாரர்களால் நிரூபிக்கப்பட்டிருக்கிறது.

பகவத்கீதையில் சொல்லப்பட்ட இந்த பக்தியோகந்தான் உபநிஷத்துக்களில் கூறப்பட்ட மோக்ஷசாதனமான பரமபுருஷ ஸாக்ஷாத்காரம், (தரிசனம்) என்று ஸித்தாந்தம். இதுவே நாந்ய: பந்தா:' மோக்ஷத்துக்கு வேறுவழி கிடையாது),

என்று வேதத்தில் பேசப்பட்டு இந்த நியாயத்தால் அபூர்வமான விசிஷ்டாத் வைத ஸித்தாந்தத்தில் ஸம்பிரதாய பரம்பரையில் வந்து ஸ்ரீ ராமானுஜ பகவானுல் ஸ்தாபிக்கப்பட்டது. பக்தி மார்க்கமும் உபாஸந மார்க்கமும் வெவ்வேறு வழிகளென்று இதரர்கள் வியாக்கியானம் செய்ததை இவர் ஒரு வழியாக்குகிருர். இது முக்கியமான அம்சம்.

[ஞானகர்மங்கள் சேர்ந்த இவ்வனுஷ்டானத்துக்கு]
வேதத்தில் உதாரணம்,

இப்படி ஜீவாத்ம பரமாத்ம தத்வஞான பூர்வகமாக விதிக்கப்பட்ட கருமங்களைச் செய்ய வேண்டியது அவசியம். இது கர்மயோகம், ஞானயோகம், ஆகிய இரண்டும் சேர்ந்த அநுஷ்டானம். இதனுல் எல்லாவிதப்புருஷார்த்தங்களும் பெறப்படுகின்றன, என்ற விஷயத்தில் நாம் நித்தியமாக அநுஷ்டிக்க வேண்டிய ஸந்தியாவதனத்தை உதாரணமாக்கி அதின் ரஹஸ்யார்த்தத்தை விவரிக்கிறோம். இவ்விஷயம் தைத்தரீய ஆரண்யகத்தில் இரண்டாவது பிரச்னத்தில் உளது.

രക്ഷാംസി ഹവാ പുരോനുവാകേ തപോഗ്രമതിഷ്ഠന്ത |
താൻ പ്രജാപതിർവരേണോപാമന്ത്രയത |
താനി വരമവൃണീതാദിത്യോ നോ യോദ്ധാ ഇതി |
താൻ പ്രജാപതിരബ്രവീത് | യോധയധ്വമിതി | തസ്മാ
ദുത്തിഷ്ഠന്തം ഹവാ താനി രക്ഷാംസ്യാദിത്യം യോധയന്തി യാവദസ്ത
മന്വഗാത് | താനിഹവാ ഏതാനി രക്ഷാംസി ഗായത്രിയാഭിമന്ത്രി
തേനാംഭസാ ശാമ്യന്തി | തദുഹവാ ഏതേ ബ്രഹ്മവാദിനഃ
പൂർവാഭിമുഖാഃ സന്ധ്യായാം ഗായത്രിയാഭിമന്ത്രിതാ ആപ
ഊർധ്വം വിക്ഷിപന്തി | താ ഏതാ ആപോ വജ്രീഭൂത്വാ താനി
രക്ഷാംസി മന്ദേഹാരുണേ ദ്വീപേ പ്രക്ഷിപന്തി | യത്പ്രദക്ഷിണം
പ്രക്രമന്തി തേന പാപ്മാനമവധൂന്വന്തി | ഉദ്യന്തമസ്തം യന്തമാദിത്യമഭി
ധ്യായൻ കുർവൻ ബ്രാഹ്മണോ വിദ്വാൻ സകലം ഭദ്രമശ്നുതേ ||
അസാവാദിത്യോ ബ്രഹ്മേതി | ബ്രഹ്മൈവ സൻ ബ്രഹ്മാപ്യേതി
യ ഏവം വേദ |

என்று இந்த மந்திரத்துக்கு உள்ளப்படியே மேலாக அறியப்படும் அர்த்தமாவது? பூர்வ மொருகாலத்தில் சில ராக்ஷஸர்கள் உக்கிரமான தபஸைச் செய்தார்கள். அவர்களுக்குப் பிரஜாபதி தோன்றி வரங்கேட்கச் சொன்னார். ராக்ஷஸர்கள் ஸூரியனோடு எப்போதும் யுத்தம் செய்யவேண்டு மென்று வரங்கேட்டார்கள். அப்படியே சண்டை செய்யுங்கள், என்று பிரஜாபதியும் மொழிந்தார். இந்த வரத்தைப் பெற்று அவ்வரக்கர்கள் உதயம் முதல் அஸ்தமனம் வரையில் ஆதித்தியனோடு சண்டை செய்துகொண்டு வருகிறார்கள். ஆனால் அவர்கள் காயத்ரிமந்திரத்தினால் சுத்தி செய்யப்பட்ட ஜலத்தால் நாசத்தை அடைவார்கள், ஆகையால் பிரும்மவாதிகள் ஸந்தியாகாலத்தில் காயத்ரீ மந்திரத்ததால் சுத்தமான ஜலத்தை ஆகாசத்தில் உயரப்போடுவார்கள். அந்த ஜலங்கள் வஜ்ஜிராயுதங்களாகி மந்தேஹாருணர, என்னப்பட்ட அந்த ராக்ஷஸர்களை வெகுதூரத்திலுள்ள தீ வொன்றில் தள்ளிவிடுகின்றன. இவர்கள் செய்யும் பிரதக்ஷிணத்தால் அந்தப்பாவம் போய்விடும். ஆகையால் சூரியபகவானை உதயத்திலும் அஸ்தமனத்திலும் தியானம் செய்துகொண்டு இந்த காரியத்தைச் செய்துகொண்டு வருகிறவர்கள் இங்கு சகல மங்களங்களையுமடைந்து சூரியபகவானென்கிற பிரும்மத்தையும் அடைந்து பிரும்மமாக ஆய்விடுவார்கன். என்று,

இதன் ரஹஸ்யார்த்தம் யாதெனில்? தேஜாரூபியான ஜீவாத்மாவே சூரியன். இவனோடு தினந்தோரும் பொழுது விடிந்தமுதல் பொழுதுபோகும் வரையில் யுத்தம்செய்கிற மந்தேஹாதி ராக்ஷஸர்கள் ராகம் துவேஷம் முதலிய கெட்ட குணங்களையுடைய வாக்கு முதலிய இந்திரியங்கள். (பிருஹதாரண்யோபனிஷத்து 3-3-ல் ஸ்ரீ சங்கரபாஷ்யத்தில், ஸ்வாபாவிகமான காமாதி வாஸனையை யுடையவர்கள் ராக்ஷஸர்கள். சாஸ்திரீயமான தயாதாக்ஷிண்யாதி குணமுடையவர்கள் தேவர்கள், என்று சொல்லப்பட்டது) இத்தகைய ராக்ஷஸ்ர்கள் பரிசுத்தனான ஜீவாத்மாவை தினந்தோரும் ஸ்வாதீனப்படுத்திக்கொண்டு அவனைக் கெட்ட வழிகளில் நடக்கச்செய்கிறார்கள். இந்த ஜீவாத்மா காயத்ரீ மந்திரத்தால் தனக்கு அந்தராத்மாவான (உள்ளுயிரான)

பரமாத்மாவைப் பிரார்த்தித்துக்கொள்ளுகிறுன். ஸர்வப்பிரேரகனுகவும் (எல்லாவற்றையும் நடத்துகிறவனுனவனும்) ஸர்வாந்தர்யாமியான ஸ்வாமியே! தேவரீருடைய திவ்யமான தேஜஸ்ஸை ஸதா தியானம் செய்கிறேன். தேவரீர் என்னை நல்ல கருமங்களில் ஏவவேண்டும், என்று. இதுதான் இந்த மந்திரத்தின் அர்த்தம். இப்படி அந்தராத்மாவை பிரார்த்தித்து ஜலத்தை அவன் திருவடியில் ஸமர்ப்பிக்கிறவன் அவனனுக்கிரஹத்தால் அந்த காமக்ரோதாதி ராக்ஷஸர்கள் நாசமடைந்து தயாதாக்ஷிண்யம் முதலிய நல்ல குணங்கள் தலையெடுத்து இந்தலோகத்தில் எல்லா சுகங்களையு மனுபவித்து இந்த தியானத்தால் பரலோகத்தில் சாசுவதமான சுகங்களையு மனுபவிப்பான், என்று.

ஆதித்திய மண்டலத்தின நடுவிலிருக்கும் பரமாத்மாவே ஜீவனுக்கு மந்தர்யாமி யாகையால் அவனுக்குப்பிரதக்ஷிணமாவது அவனுக்கு அநுகூலமாயிருப்பதைக் காட்டும், அபிநயம் அவனுக்கு அநுகூலமாவது அவன் ஆணையை அனுசரித்து வருவது.

இவ்விதமான ஞானத்துடன் கருமங்களைச் செய்யவேண்டுமென்பது அபித்யாயன்,குர்வன்,என்னும் பதங்களினுல் சொல்லப்பட்டது.

ஆகையால் எந்தக் காரியத்தையும் தத்துவக்ஞானத்துடன் செய்யவேண்டுமென்று கர்மத்தினுடையவும் ஞானத்தினுடையவும் பிரியவொண்ணுத சேர்க்கை தெரியப்படுத்தப்பட்டது.



## நான்காம் அத்தியாயம்

---

### பக்தி யோகம்

[பகவது பாஸனத்துக்கு மூலகாரணம் சாந்தி]

ஸவ௯ம் வலிவும் ஹ

(காணப் படுமிவையெல்லாம் பிரும்மமே) என்பது முதலான படிகளில் உபனிஷத்துக்களில் சொல்லப்பட்ட பரமாத்மாவின் ஸர்வாத்மத்வத்தை (எல்லாவற்றிற்கும் உயிராயிருத்தலே)யும் ஜீவாத்மாவின் பரஸ்பரஸாம்யத்தை (ஒரேமாதிரியாய் யிருப்பதை யும் நன்ருயறிந்தால் ஸ்நேஹமென்றும் பிரேமை யென்றும் பாவபந்தமென்றும் பிரணயமென்றும் சொல்லப்பட்ட பகவானுக் குக்கூட அளவிடமுடியாதபகவத் பிரீதிரூபமான(தும்) உபாசனத் துக்கு மூலகாரணமு, மான சாந்தியுண்டாகுமென்று ஆரம்பத் தில் சொல்லப்பட்டது, இத்தகையபிரீதியை பகவான்

ஷி யொஹீஞானிநொ<க்யுஊ௯ ஹம்ஸ வ ஜ ஷியஃ |

நான் ஞானியின் அளவிடவொண்ணுத பிரீதிக்குப் பாத்திரனு கிறேன். அதற்கனுகுணமாகவே அவனும் என் பிரீதிக்கு விஷய மாகிருன், என்றருளிச்செய்தார். இத்தகைய சாந்தியை பூர்வா சாரியர்கள் சொல்லும் கிரமத்தில் இங்குவிவரிக்கிருேம்.

[சாந்தி ஸ்வரூபம், அதன் விரோதிகள், பரிஹாரம்]

சாந்தியென்ருல் ராகம் (ஆசை) துவேஷம்மோஹம், இவைகளற் றிருக்கை, இவைகள் உத்கடமான (மிகைபெற்ற) தெசையை யடைந்தால்காமம் கோபம், லோபம் என்னும் பெயர்களால் முறையே பேசப்படுகின்றன. இந்த குணங்களே தேவர் அசுரர் மனுஷ்யர், என்னும்விபாகத்துக்குக் காரணங்கள். ஆகையால்.

திவியம் நாகஸ்யெஷு தக அாமம் நாஶ நொஜ்ஞ நஃ |
காஃ கொயஹுயா ஜொஹஃ தஹுாஷெதக தயம்தஜெக |

காமம் குரோதம் அப்படியே லோபம் ஆகிய இவை நரகத்துக்கு மூன்றுவிதமான கோட்டை வாசல்கள். ஆத்மாவை நாசப்படுத்துமவைகள். ஆகையால் இவை மூன்றையும் ஒழிக்கக் கடவன், என்றபடியே இவைகளைப் பூரணமாகத் துலைக்க வேண்டியது முதற்கடமை. இதுவே சாஸ்திரத்தின் முக்கிய உபதேசம். இந்த தோஷங்கள் ஜீவாத்ம பரமாத்மஸ்வபாவ நிர்ணயமில்லாதவர்களுக்கு ஸஹஜமாய் உண்டாகின்றன. இவர்களின் ஸ்வபாவங்களிருக்கும் பிரகாரம்.

𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌵𑌿𑌨𑌯𑌸𑌂𑌪𑌨𑍍𑌨𑍇 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑍇 𑌗𑌵𑌿 𑌹𑌸𑍍𑌤𑌿𑌨𑌿 |
𑌶𑍁𑌨𑌿 𑌚𑍈𑌵 𑌶𑍍𑌵𑌪𑌾𑌕𑍇 𑌚 𑌪𑌣𑍍𑌡𑌿𑌤𑌾𑌃 𑌸𑌮𑌦𑌰𑍍𑌶𑌿𑌨𑌃 |
𑌇𑌹𑍈𑌵 𑌤𑍈𑌰𑍍𑌜𑌿𑌤𑌃 𑌸𑌰𑍍𑌗𑍋 𑌯𑍇𑌷𑌾𑌂 𑌸𑌾𑌮𑍍𑌯𑍇 𑌸𑍍𑌥𑌿𑌤𑌂 𑌮𑌨𑌃 |
𑌨𑌿𑌰𑍍𑌦𑍋𑌷𑌂 𑌹𑌿 𑌸𑌮𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌿 𑌤𑍇 𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌃 |

வித்யையால் விநயமடைந்தவன், கேவல பிராம்மணன், பசு, யானை, நாய், அதை புசிப்பவன், இப்படி வெவ்வேறுபட்ட பிராணிகளிலுள்ள ஜீவாத்மா ஒரேமாதிரி யானவன், ஞானஸ்வரூபன், என்று பண்டிதர்கள் அறிவார். இப்படி எவர்களுடைய மனது சமதர்சனத்திலிருக்கிறதோ, அவர்களால் இவ்வுலகத்திலேயே பிறவி முதலியவை ஜெயிக்கப்பட்டன. பிரும்மம், என்னும் ஆத்மாவுக்கு இயற்கையில் தோஷமில்லை. அதனால் அவர்கள் அத்தகைய பிரும்மத்தில் நிலைத்தவரானார்கள், என்பது முதலிய சுலோகங்களால் விவரிக்கப்பட்டது.

ஜீவாத்மாக்கள் ஞானமொன்றையே உருவாக உடையவர்கள் தேவர் மனிதர் பிராணி ஸ்தாவரம் முதலியபேதங்கள் அவர்களுக்கு உடலாயிருக்கும் பிரகிருதிக்குச் சேர்ந்தவைகள். ஆத்மாக்களைச் சேர்ந்தவை யல்ல. ஆத்மாக்களின் இந்தஸாம்யத்தை (ஒன்றான ஆகாரத்தை) ஞானிகள் கண்டறிவார்கள். இத்தகைய ஸமதர்சிகள் இந்தலோகத்திலிருக்கும் போதே முக்தர்கள் (ஜீவன் முக்தர்கள்) எனப்படுவார்கள்.

இந்த ஸமதர்சன முண்டானால் பரமாத்மாவுக்கும் நமக்குமுள்ள ஞானாகார ஸாம்யத்தை (ஒற்றுமையை)யு மறிந்து அவனுடைய ஸர்வாந்தர்யாமித்வத்தை (எல்லாவற்றிக்கும் உள்ளு

யிராயிருப்பதை) யும் நிச்சயித்துக்கொண்டு நம்மிடத்தில் அபகாரம் முதலிய வற்றை ச்செய்யும் பிறர் விஷயத்தில் துவேஷபாவனையற்றிருக்கும் பரிபக்குவம் நமக்குவந்துவிடும், எப்படியென்றால்? அவர்கள் நம்முடைய குற்றங்களுக்குத் தக்கபடி நம்மைத்திருத்தும் பொருட்டு பகவானால் ஏவப்பட்டு அவ்வபகாராதிகளை நமக்குச் செய்தார்கள், என்றறிவோம். மேலும் அவர்களுக்கு ஏதாவது கஷ்டம் வந்தபொழுது தயையால் அவர்களுக்கு நாம் உபகரிக்கவேண்டுமென்னும் நினைவும் (பாவமும்) உண்டாகும். இதை யுண்டாக்குவதற்காகவே,

ஐததாத்ம்யமிதம் ஸர்வம் தத்ஸத்யம் ஸ ஆத்மா தத்வமஸி ஶ்வேதகேதோ ।

ஓ சுவேதகேதுவே! இவையெல்லாம் இந்த பிரும்மத்தை ஆத்மாவாக வுடையவைகள். அது ஸத்தியம், அதுவே ஆத்மா, நீயும் அதுவே யாகிறாய், என்பது முதலான வுபதேசங்கள் பிரவிருத்திக்கின்றன. இதுதான் பிரஹலாதன் முதலியவர்களின் அபிசந்தி (மனதின் தீர்மானம்)

ஸர்வ பூதாத்மகே தாத ஜகந்நாதே ஜகந்மயே ।
பரமாத்மநி கோவிந்தே மித்ராமித்ர கதா: குத: ॥

(விஷ்ணுபுராணம்) அப்பா! பிரபஞ்சத்துக்கெல்லாம் நாதனும் பிரபஞ்சத்தையே உருவாக வுடையவனும் எல்லா பூதங்களுக்கும் உள்ளுயிராயு மிருக்கும் பரமாத்மாவான கோவிந்தனிடத்தில் சினேகிதன் விரோதி, என்னும் கதைகளும் உண்டாகவோ? என்று பிரஹ்ளாதன் ஹிரண்யகசிபுவை நோக்கிச் சொன்னான். மனுவும்,

ஸர்வபூதேஷு சாத்மாநம் ஸர்வபூதாநி சாத்மநி ।
ஸமம் பஶ்யந்நாத்மயாஜீ ஸ்வாராஜ்யமதிகச்சதி ।
யஸ்து ஸர்வாணி பூதாநி ஆத்மந்யேவாநுபஶ்யதி ।
ஸர்வபூதேஷு சாத்மாநம் ததோ ந விஜுகுப்ஸதே ।

எல்லா பூதங்களிடத்தும் தன்னையும் தன்னிடத்தில் எல்லா பூதங்களையும்ஸமமாகப் பார்த்துக்கொண்டுஆத்மயாகத்தை, (ஆத்

மாவை அர்ப்பணம் பண்ணுதலை)ச் செய்பவன் ஸ்வாராஜ்யத்ஸத, தன்ஸ்வரூப நிலையைப் பெறுகிறான். இப்படி எவன் எல்லாபூதங்களிடத்தும் தன்னைக்காண்கின்றானோ, அவன் எல்லாருக்கும் ஸமனாகிறான். பரமபதம், என்னப்பட்ட பிரும்மத்தையடைகிறான், என்றார்.

ஸ்ரீ பாகவதத்தில்,

𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌯𑌃 𑌪𑌶𑍍𑌯𑍇𑌦𑍍 𑌭𑌗𑌵𑌦𑍍𑌭𑌾𑌵 𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 ।
𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌭𑌗𑌵𑌤𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑍍𑌯𑍇𑌷 𑌭𑌾𑌗𑌵𑌤𑍋𑌤𑍍𑌤𑌮𑌃 ।

எல்லா பிராணிகளிடத்தும் தன்னுடைய பகவத் பாவத்தையும் அவைகளை பகவானிடத்தும் தன்னிடத்தும் காண்கின்றவனே உத்தம பாகவதனாவான், என்றருளிச் செய்யப்பட்டது.

இத்தகைய ஸமதர்சனம் பெறுவதற்கு நம்மிடத்தில் தாமம் (இந்திரியங்களை யடக்குதல்) தானம் தயை, என்னும் ஆத்மகுணங்கள் பெருகவேண்டும். இவை முறையே முற்கூறப்பட்ட காமம் கோபம் லோபம் ஆகிய துர்குணங்களைப் போக்குவதற்கு இன்றியமையாதவை. இவைகளை விருத்தி செய்து ஆத்மநாசனங்களான காமக்குரோதாதிகளை கிரமமாகச் சமனம் செய்கிறவர்கள் தான் ஆரியர்கள், என்று சாஸ்திராதிகாரிகள் சிக்ஷித்தார்கள்.

[உபனிஷத்தில் உதாரணம்]

இந்த விஷயத்தை விளக்க பிருஹதாரண்யக உபனிஷத்தில் (7-2-ல்) சொல்லப்பட்ட இந்தக்கதை கவனிக்கத்தக்கது.

𑌤𑍍𑌰𑌯𑌾𑌃 𑌪𑍍𑌰𑌜𑌾𑌪𑌤𑍌 𑌪𑌿𑌤𑌰𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌚𑌰𑍍𑌯𑌮𑍍 𑌊𑌷𑍁𑌃 । 𑌦𑍇𑌵𑌾 𑌅𑌸𑍁𑌰𑌾 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌾 𑌇𑌤𑌿 । 𑌉𑌷𑌿𑌤𑍍𑌵𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌚𑌰𑍍𑌯𑌂 𑌦𑍇𑌵𑌾 𑌊𑌚𑍁𑌃 । 𑌬𑍍𑌰𑌵𑍀𑌤𑍁 𑌨𑍋 𑌭𑌵𑌾𑌨𑌿𑌤𑌿 । 𑌤𑍇𑌭𑍍𑌯𑍋 𑌹𑍈𑌤𑌦𑌕𑍍𑌷𑌰𑌮𑍁𑌵𑌾𑌚 । 𑌦 𑌇𑌤𑌿 । 𑌵𑍍𑌯𑌜𑍍𑌞𑌾𑌸𑌿𑌷𑍍𑌟𑌾3 𑌇𑌤𑌿 । 𑌵𑍍𑌯𑌜𑍍𑌞𑌾𑌸𑌿𑌷𑍍𑌮𑍇𑌤𑌿 𑌹𑍋𑌚𑍁𑌃 । 𑌦𑌾𑌮𑍍𑌯𑌤𑍇𑌤𑌿 । 𑌓𑌮𑌿𑌤𑌿𑌹𑍋𑌵𑌾𑌚 𑌵𑍍𑌯𑌜𑍍𑌞𑌾𑌸𑌿𑌷𑍍𑌟𑍇𑌤𑌿 । 𑌅𑌥𑌹𑍈𑌨𑌂 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌾 𑌊𑌚𑍁𑌃 । 𑌬𑍍𑌰𑌵𑍀𑌤𑍁𑌨𑍋 𑌭𑌵𑌾𑌨𑌿𑌤𑌿 । 𑌤𑍇𑌭𑍍𑌯𑍋 𑌹𑍈𑌤𑌦𑍇𑌵𑌾𑌕𑍍𑌷𑌰𑌮𑍁𑌵𑌾𑌚 । 𑌦 𑌇𑌤𑌿 । 𑌵𑍍𑌯𑌜𑍍𑌞𑌾𑌸𑌿𑌷𑍍𑌟𑌾 (3) 𑌇𑌤𑌿 । 𑌵𑍍𑌯𑌜𑍍𑌞𑌾𑌸𑌿𑌷𑍍𑌮𑍇𑌤𑌿 𑌹𑍋𑌚𑍁𑌃 । 𑌦𑌤𑍍𑌤𑌨 ।

𑌦𑌤𑍍𑌤𑍇𑌤𑍀 । 𑌓𑌮𑌿𑌤𑌿 𑌹𑍋𑌵𑌾𑌚𑌵𑍍𑌯𑌜𑍍𑌞𑌾𑌸𑌿𑌷𑍍𑌟𑍇𑌤𑌿 । 𑌅𑌥𑌹𑍈𑌨𑌂
𑌅𑌸𑍁𑌰𑌾 𑌊𑌚𑍁𑌃 । 𑌬𑍍𑌰𑌵𑍀𑌤𑍁𑌨𑍋 𑌭𑌵𑌾𑌨𑌿𑌤𑌿 । 𑌤𑍇𑌭𑍍𑌯𑍋𑌹𑍈
𑌤𑌦𑍇𑌵𑌾𑌕𑍍𑌷𑌰𑌮𑍁𑌵𑌾𑌚 । 𑌦 𑌇𑌤𑌿 । 𑌵𑍍𑌯𑌜𑍍𑌞𑌾𑌸𑌿𑌷𑍍𑌟𑌾𑌇𑌤𑌿𑌵𑍍𑌯𑌜𑍍𑌞𑌾𑌸𑌿𑌷𑍍𑌮𑍇𑌤𑌿
𑌹𑍋𑌚𑍁𑌃 । 𑌦𑌯𑌧𑍍𑌵𑌮𑌿𑌤𑌿 । 𑌓𑌮𑌿𑌤𑌿 𑌹𑍋𑌵𑌾𑌚 𑌵𑍍𑌯𑌜𑍍𑌞𑌾𑌸𑌿𑌷𑍍𑌟𑍇𑌤𑌿 ।

𑌤𑌦𑍇𑌤𑌦𑍇𑌵𑍈𑌷𑌾𑌦𑍈𑌵𑍀 𑌵𑌾𑌗𑌨𑍁𑌵𑌦𑌤𑌿𑌸𑍍𑌤𑌨𑌯𑌿𑌤𑍍𑌨𑍁𑌃 ।
𑌦, 𑌦, 𑌦, 𑌇𑌤𑌿 𑌦𑌾𑌮𑍍𑌯𑌤 𑌦𑌤𑍍𑌤 𑌦𑌯𑌧𑍍𑌵𑌮𑌿𑌤𑌿 । 𑌤𑌦𑍇𑌤𑌤𑍍𑌤𑍍𑌰𑌯𑌂 𑌶𑌿𑌕𑍍𑌷𑍇𑌤𑍍
𑌦𑌮𑌂 𑌦𑌾𑌨𑌂 𑌦𑌯𑌾𑌮𑌿𑌤𑌿 ।

இதன் அர்த்தமாவது, பிரும்மாவின் புத்திரர்களான தேவர்களும் மனுஷர்களும் அசுரர்களும் பிதாவிடத்தில் வெகுகாலம் சிஷ்யர்களாயிருந்து வந்தார்களே, அக்காலத்தில் முதலில் தேவர்கள் பிதாவை நோக்கி 'எங்களுக்கு உபதேசிக்கவேண்டும், என்று கேட்டுக்கொண்டார்கள். பிதாவான பிரும்மாவும் த, என்ற ஒரு எழுத்தைமட்டும் அவர்களுக்கு உபதேசித்துவிட்டு 'தெரிந்து கொண்டீர்களா ? என்று கேட்டார். அவர்களும் 'ஆம் தெரிந்து கொண்டோம். தாம்யத-காமகுணத்துக்குப் பதிலாக தமகுணத்தை ஸம்பாதித்துக் கொள்ளுங்கள் என்று உபதேசித்தீர்கள், என்றார்கள். பிரும்மா அப்படியேதான் நன்று யறிந்தீர்கள். என்று மறுமொழி சொன்னர். பிறகு மனிதர்களுடைய வேண்டுக்கோளுக்கும் த. என்றும் ஒரெழுத்தையே உபதேசித்து அறிந்தீர்களா, வென்று பிரும்மா கேட்டார். தத்த, லோபகுணத்துக்கு எதிரிடையான தானகுணத்தை அப்பியாசம் செய்யுங்கள்,எனறு உபதேசமாகிறதென்றார்கள்.பிரும்மாவும் அப்படித்தான், என்று சந்தோஷத்துடன் அதை ஆமோதித்தார். அநந்தரம் அஸுரர்கள் பிரார்த்தித்ததுக்கும் முன்போல் த; என்னும் மெழுத்தையே பிரும்மா உபதேசித்தார். அவர்களும் தயத்வம், கோபகுணத்துக்கு பதிலாக தயாகுணத்தை விருத்தி செய்யுங்கள், என்று சொல்ல அதைக்கேட்டு அப்படித்தான், என்று பிதா மொழிந்தார். ஆகையால் தான் ஆகாசத்தில் மேக சப்தமானது த, த, த, என்று கேட்கப்படுகிறது. அதைக் கேட்டால் தம தான தயா குணங்களை அவசியம் அப்பியஸித்து காமம் லோபம் கோபம்

ஆகிய துர்குணங்களை ஜயித்து தன்னியராகுங்கோள், என்று தேவ வாக்குச் சொல்லுகிறது போலிருக்கும். இம்மேக சப்தம் பிரும் மாவின் உபதேசந்தானே, என்னும்படியு மிருக்கிறது என்று.

இதில் முக்கிய தாத்பரிய மென்னவென்றால் மனுஷ்யர் களிலேயே காமத்தை மிகுதியாக உடையவர்கள் தேவர்கள். லோபத்தை அதிகமாக உடையவர்கள் மனுஷ்யர். கோபாதிகர்கள் அஸுரர்கள், என்று விபாகம் செய்யலாம். இவர்கள் தங்கள் தங்களிடமுள்ள தோஷங்களைத் தெரிந்து சங்கித்துக்கொண்டு பிதாவான பிரஜாபதியிடத்தில் உபதேசத்துக்குப் போனார்கள். அவரும் இவர்களுடைய தோஷங்களைக் கவனித்து ஓரோர் அக்ஷ ரத்தை யுபதேசித்தவாறே இவர்களும் தங்கள் தங்களிடமுள்ள கெட்ட குணங்களை யுணர்ந்து அதற்குப் பரிஹாரத்தையு மறிந்து கொண்டார்கள். என்று இந்த நியாயம் உலகத்திலும் பிரஸித்தம்.

இந்தக் கதையால் பிதா மாதா முதலானவர்கள் தங்கள் புத் திரர் முதலியவர்களை அவர்களுடைய தோஷத்தைக் காட்டி சிக்ஷிக்க வேண்டுமென்றும் தந்தாமுடைய பிசகுகளை யறிந்தவர் கள் தான் அல்ப உபதேசத்தாலும் நல்லவழிக்கு வருவார்களென் றும் சொல்லிற்றாயிற்று.

இதைச் சுருக்கியே வியாக்கியான ரூபமான பகவத் கீதை யில்,

> த்ரிவிதம் நரகஸ்யேதம் த்வாரம் நாசநமாத்மந: ।
> காம: க்ரோதஸ்ததா லோபஸ்தஸ்மாதேதத் த்ரயம் த்யஜேத் ।

நரகத்துக்கு மூன்றுவிதமான கோட்டை வாசல்கள். காமம் கோபம் லோபம், என்பவை அவை. ஆத்மாவை நாசப்படுத்து மவைகள். ஆகையால் இவை மூன்றையும் ஒழிக்கக்கடவன், என் றருளிச் செய்யப்பட்டது.

[பக்தி யுண்டாகும் கிரமம்]

இப்படியால் விரோதி குணங்களை ஜயித்து பக்திக்கு மூல காரணமான சாந்தியைப் பெற்றுப் பகவானிடத்தில் இடைவிடாத அளவற்ற ப்ரீதிரூபமான பக்தியைச் செய்ய வேண்டுமென்று

சொல்லப்பட்டது. இனி அது உண்டாகும் படிகளைப் பராமர்சிப்போம்.

> 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌭𑍂𑌤𑌃 𑌪𑍍𑌰𑌸𑌨𑍍𑌨𑌾𑌤𑍍𑌮𑌾 𑌨 𑌶𑍋𑌚𑌤𑌿 𑌨 𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑌤𑌿 |
> 𑌸𑌮𑌃 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁 𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌮𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑌿𑌂 𑌲𑌭𑌤𑍇 𑌪𑌰𑌾𑌮𑍍 |
> 𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 𑌮𑌾𑌮𑌭𑌿𑌜𑌾𑌨𑌾𑌤𑌿 𑌯𑌾𑌵𑌾𑌨𑍍𑌯𑌶𑍍𑌚𑌾𑌸𑍍𑌮𑌿 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌤𑌃 |
> 𑌤𑌤𑍋 𑌮𑌾𑌂 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌤𑍋 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌵𑌿𑌶𑌤𑍇 𑌤𑌦𑌨𑌨𑍍𑌤𑌰𑌮𑍍 |

முன் சொல்லப்பட்ட பிரகாரத்தில் சாந்தியுடனும் தெளிவுடனும் ஆத்மாவை யுள்ளபடி யறிந்து ஆத்மானுபவத்திலேயே சுகித்திருப்பவன் துக்கமடைவது மில்லை. ஆசைப்படுவதுமில்லை. எல்லா பூதங்களிடத்தும் ஸமபாவனையை யுடையவனுப் அளவிட முடியாத ஞானமே உருவாயிருக்கும் பகவானுக்கு உறித்தாயிருப்பதேயான தன் ஸ்வபாவத்தைத் தெளிகின்றான். இந்த தியான யோகத்தால் மற்றவை யாவையையும் திருணம்போல் நினைக்கிறான். அத்தகையவன் என்னிடத்தில் எல்லையில்லாத பிரீதிரூபமான பக்தியை அடைகிறான். பக்தியினால் என் ஸ்வரூப ஸ்வபாவாதிகளை உண்மைபாக வறிகிறான். அப்படியிருந்து என்னிடமே பிரவேசித்து விடுகிறான்' என்று கீதையில் இந்தக்கிரமம் சொல்லப்பட்டது. பக்தியின் பலன் தாத்விகமான (உண்மையான) ஞானம் தர்சனம் பிரவேசம், என்று படிப்படியாகப் பேசப்பட்டது.

ஸமக்ரமான (பூர்ணமான) இந்த பக்தியோகம் கீதை ஒன்பதாவது அத்தியாயத்தில் உபதேசிக்கப்பட்டது. இதில் முதலிலேயே சாமர்த்திய மில்லாவிடில் அப்பியாச யோகம் செய்யவேண்டும். அதிலும் சக்தியில்லாவிட்டால் பக்தியோகத்துக்கு அங்கமான கிரியாயோகம் (பக்திப்பெருக்கும் காரியங்கள்) செய்யவேண்டும். அதுவும் முடியாவிட்டால் மூன்றாவது அத்தியாயத்தில் சொல்லப்பட்ட கர்மயோகத்தைச் செய்யவேண்டும், என்று இந்த வரிசை பனிரண்டாவது அத்தியாயத்தில் விரிக்கப்பட்டது. அங்கேயே அக்ஷரயோகமென்று பக்தியோகத்துக்கு ஸாதனமான மற்றொரு யோகம் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் அதைச் செய்வது மிகவும் கஷ்டம். பக்தியோகத்துக்கு அதிசயத்தைக் காட்டுவதற்கு இதுவும் விவரிக்கப்பட்டது.

இந்தப்பிரகாரம் பகவத்கீதையில் கர்மயோகம், ஞானயோகம் ஞானயோகாத்மகமான கர்மயோகம், தியானயோகம், கிரியாயோகம், அப்பியாஸயோகம், அக்ஷரயோகம், பக்தியோகம், என்று எட்டுவிதமான யோகங்கள் சொல்லப்பட்டன. இவையெல்லாம் பக்தி யோகத்திலேயே முடிவுபெறக் கடவன.

[பக்தி அதிகாரி பேதங்கள்]

இந்த பக்தியோகம் அதைச் செய்யும் அதிகாரிகளின் பேதத்தை யநுசரித்து எல்லா பலன்களையும் கொடுக்கக்கூடியதென்று,

சதுர்விதா⁴ ப⁴ஜந்தே மாம் ஜநா: ஸுக்ருதிநோऽர்ஜுந |
ஆர்தோ ஜிஜ்ஞாஸுரர்தா²ர்தீ² ஜ்ஞாநீ ச ப⁴ரதர்ஷப⁴ |

ஓ பரதரிஷபனே! ஸுகிருதம் பண்ணின ஜனங்கள் என்னை பக்தியுடன் நான்கு வகைகளாக அடைகிறார்கள். அவர்களாவார்? துக்கத்திலிருந்து மீள ஆசைப்படுகிறவன், ஆத்மஞானத்தை வேண்டுகிறவன், ஐசுவரியத்தை யபேக்ஷிப்பவன், என்னையே ஸர்வமுமென்று அறிந்து என்னையே பெற அபேக்ஷிப்பவன், என்று இந்த சுலோகத்தில் பகவான் தெரிவித்தான்.

அடுத்தாப்போல் துஷ்கிருத்துக்களும் (தீச்செயல் செய்பவர்களும்) நான்கு வகையினர், என்பதும்,

ந மாம் து³ஷ்க்ருதிநோ மூடா⁴: ப்ரபத்³யந்தே நராத⁴மா: |
மாயயாऽபஹ்ருதஜ்ஞாநா ஆஸுரம் பா⁴வமாஶ்ரிதா: |

கெட்டவர்களான மூடர் (விபரீத ஞானமுடையவர்) நராதமர் (ஞானம்பெற்றும் பகவானிடத்தில் பிரீதி வைக்காதவர்) மாயாவிகள் (பகவான் மஹிமையை குயுக்திகளால் அழிக்கப்பார்ப்பவர்) அஸுர பாவத்தை யடைந்தவர் (பகவான் மஹிமையை எவ்வளவுக்கெவ்வளவு அறிவார்களோ அவ்வளவுக் கவ்வளவு அவனை துவேஷிப்பவர்) ஆகிய இவர்கள் என்னை அடைவதில்லை, என்று சொல்லப்பட்டது.

இவ்வளவால் நாம் தெரிந்துகொள்ளவேண்டிய உத்தம ஸாராம்சம் என்னவென்றால்?

ஶரீராரோக்யமைஶ்வர்யம் போகாம்ஶ்சைவாநுஷங்கிகாந் |
ததாதி த்யாயிநாம் நித்யம் அபவர்கப்ரதோ ஹரி: | என்பது.

இதனர்த்தம். தன்னை பக்தியுடன் தியானம் பண்ணுகிறவர்களுக்குப் பரமபுருஷார்த்தமான மோக்ஷத்தையே கொடுக்க விருக்கிற பகவான் ஹரியானவர் தாமே சரீர ஆரோக்கியம் ஐசுவரியம் இவற்றை யொட்டிய மற்ற போகங்கள் இவைகளை யெல்லாம் நிச்சயமாகத் தருவான், என்றதால் அவனிடத்தில் அற்ப பிரயோஜனங்களைக் கோலாமல் அவன் விஷயமான ஞானம் பக்தி இவைகளை மட்டும் விவேகியானவன் கேட்கக் கடவன், என்றபடி.

[பக்திஸ்வரூபம்]

ஸ்ரீ பாஷ்யகாரர் வேதார்த்த ஸங்கிரஹத்தில் கடைசியில் பக்தியென்பது மோக்ஷத்துக்கு ஸாதனம் (உபாயம்) என்று நிரூபித்தருளினர். அதற்கே பரபக்தியென்றும் பெயர். அந்த பக்தியாவது ?

சாஸ்திரத்தால் தத்துவ ஞானத்தை சம்பாதித்துக்கொண்டு வர்ணாச்ரம தர்மங்களை அங்கங்களாக (உருப்புகளாக) வைத்துக்கொண்டு செய்யப்படும் பகவத்தியான ரூபமாக விருக்கும். இந்த தியானம் பகவானிடத்தில் நிரதிசய (அளவற்ற) பிரீதிரூபமாய் அவனை நேரில் கண்ட மாதிரியாக (பிரத்தியக்ஷஸமாநாகாரமாக) ஆனந்த வெள்ளம் பெருகியிருக்கும், என்று ஸித்தாந்தப் படுத்தியிருக்கிறார்.

ப்ரஹ்மப்ராப்த்யுபாயஶ்ச ஶாஸ்த்ராதிகததத்த்வஜ்ஞாநபூர்வக ஸ்வகர்மாநுக்ருஹீத பக்திநிஷ்டாஸாத்ய அநவதிகாதிஶயப்ரிய விஶததம ப்ரத்யக்ஷதாபந்நாநுத்யாநரூப பரபக்திரேவ |

என்று இதன் வியாக்கியானத்தின் ஸாராம்சம் வருமாறு.

ஸ்நேஹபூர்வமநுத்யாநம் பக்திரித்யபிதீயதே |
பக்திஸ்ஸ்வோபாயாப்திரிதி நைவஜ்ஞாங்கவதோऽபிச |
ஸஞ்ஜாதத்ருஷ்யாதத்வே ஸேவாயாம் பரிகீர்த்தித: |

தஸ்யாஃச ஸேவாவ்ரூபத்வேந் வ்யாக்யா ஹந்தி ஸேவ நஸம்ஸயதி |
இதி வோபாயம் வசஃ விஷ்ஷ்டம் ஸூத்ரகாரைர்ஜதம் |
வ்யக்தீகாரிகாதீவிகாயோஃ ஸ்ரீஸுத்ரஹதுந ஸூரிஹிஃ |

பிரீதிபூர்வமாக இடைவிடாமல் தியானம் செய்வதே பக்தி யென்னப்பட்டது. அதையே உபாஸ்தி (உபாஸநம்) என்று நிகண்டுகாரர்களும் சொன்னார்கள். பஜ், என்கிற தாதுவுக்கு (வினைப் பகுதிக்கு) ஸேவைசெய்கிறதென்று அர்த்தம். ஆகையால் மிகுந்த ஸேவையைச் செய்வதே பக்தியென்றதாயிற்று. இதுவே அறிஞர்களின் அபிப்பிராயம். ஸ்ரீ போதாயனர் இதை மிகத் தெளிவாய் விளக்கி யிருக்கிறார். இவ்வர்த்தங்கள் ஸ்ரீ ஸுதர்சனாசாரியரால் சுருதப்பிரகாசிகை, சுருத தீபம், என்னும் இரண்டு கிரந்தங்களிலும் விளக்கப்பட்டது.

எனவே, பக்தியேசேவை (கைங்கரியம்) அதே பிரீதிரூபமானது. பிரீதிரூபமான ஸேவையே உபாஸனை என்றதாயிற்று. இதனால் பகவானுடைய அநுக்கிரஹம் கிடைத்து அதன் மூலமாய் மோக்ஷம் ஸித்திக்கவேண்டும். எனவே வெறும் தத்துவ ஞானமாத்திரத்தினால் மோக்ஷம் ஸித்திக்காதென்று விளங்கிவிட்டது. கேவல தத்துவ ஞானத்தால் மோக்ஷங் கிடைக்குமென்பது அப (தப்பான) வாதம். இது நிர்தைவத (பகவா னில்லையென்றும்) வாத மென்றும் சொல்லப்படும். தேவதாநுக்கிரஹம் வெறும் ஞானத்துக்குக் கிடைக்காதென்பதும் எல்லாரும் அறிந்த விஷயமே.

[பக்தியின் மேல் பருவங்கள்]

மோக்ஷத்துக்கு உபாயமான பக்தியானது பரபக்தி, பரஞானம், பரம பக்தி, என்று மூன்று படிகளையுடைத்தா யிருக்கிறது. இதில் முதல் பருவமாகிய பரபக்தி பகவானிடத்தில் பிரீதியுடன் கூடிய தியானமாகிய ஸாதனம், என்னப்பட்டது. இத்தியானம் வளர வளர பகவானையே நேரில் காண்கிறமாதிரியான தற்காலிகமான ஒரு அநுபவம் உண்டாகும். இந்த தசைக்கு பரக்ஞானம் என்றுபெயர். இந்த அநுபவம் பெருகப் பெருக பகவானைக் கண்டபடியே இடை விடாமல் விஷய போகங்களைப்போல் அநு

பவிக்க வேண்டுமென்னும் ஆசை யுண்டாகி மேலும் மேலும் அந்த தியானம் விருத்தியடைந்து அத்தகைய நிரந்தர அனுபவமும் கிடைத்து விடும். இந்தப்பருவத்துக்கு பரமபக்தி, என்றுபெயர். இது தான் உபாஸனத்தின் பலம். பக்தியின் இந்த மூன்றுபடி களுக்கும் முறையே ஞானம், தர்சனம், பிராப்தி, என்றும் பெயர் களுண்டு.

பரபக்தி: பரஜ்ஞாநம் பரமபக்திரிதி த்ரிதா |
த்ர்வஸ்யம் ஸாதநம் ஸ்வாத்யா ஸாக்ஷாத்காரச்ச தீயதே |
ஜ்ஞாநம் ஸ்வாவ்யவஹித ப்ரத்யக்ஷாவஸ்தி நிர்ணய: |
ஸந்தர்சநம் பரா பக்திர்விஷய போகவத் |
தஸ்ய தத் த்ரயம் ஜ்ஞாந தர்சந ப்ராப்தி ஸம்ஜ்ஞிதம்|

இங்கு பகவதனுபவத்துக்கு விஷயானுபவத்தை உதாஹரண மாக்கியதின் அர்த்தம் பின்னால் விஸ்தரிக்கப்படும். சாஸ்திரங் களில் பல விடங்களில் இப்படிச் சொல்லப்பட்டிருக்கிறது.

யா ப்ரீதிரவிவேகாநாம் விஷயேஷ்வநபாயிநீ |

அவிவேகிகளுக்கு விஷயபோகங்களில் பிரீதிஎப்படி இடைவிடாம லிருக்குமோ (அப்படியே தேவரீரிடத்தில் எனக்கு பக்தியிருக்கட் டும்;

யயா து ஸம்பரிஷ்வக்தோ ந பாஹ்யம் வேத நாந்தரம் |

பகவானால் அணைந்து கொள்ளப்பட்டவனாய் வெளிவிஷயங்களை யோ உள் விஷயங்களையோ ஒன்றையு மறியான்.

யத்ர நாந்யத் பச்யதி |

எங்கு வேறொன்றையும் பார்க்மாட்டானோ, என்றிவை முதலி யன. இவ்வுதாரணங்கள் லோகானுபவத்துக்கு ஏற்றவை.

யத்ர நாந்யத் பச்யதீதி லோக ஸித்த உதாஹ்ருதம் |
நஹி ந்யாய விதாமிஷ்ட உதாஹரண ஸிக்ஷணம் |

[அர்ச்சனப் பிரணமாதிகள்]

வேதார்த்த ஸங்கிரகத்தின் ஆரம்பத்தில் ஸ்ரீ பாஷ்யகாரர்.

𑌸𑌕𑌲 𑌜𑌗𑌦𑍍𑌧𑌿𑌤𑌾𑌨𑍁 𑌶𑌾𑌸𑌨 𑌶𑍍𑌰𑍁𑌤𑌿 𑌨𑌿𑌕𑌰 𑌶𑌿𑌰𑌸𑌿 𑌸𑌮𑌧𑌿𑌗𑌤𑍋𑌽𑌯𑌮𑌰𑍍𑌥𑌃, 𑌜𑍀𑌵 𑌪𑌰𑌾𑌤𑍍𑌮𑌯𑌾𑌥𑌾𑌤𑍍𑌮𑍍𑌯𑌜𑍍𑌞𑌾𑌨 𑌪𑍂𑌰𑍍𑌵𑌕 𑌵𑌰𑍍𑌣𑌾𑌶𑍍𑌰𑌮 𑌧𑌰𑍍𑌮𑍇𑌤𑌿 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌕 𑌪𑌰𑌮 𑌪𑍁𑌰𑍁𑌷 𑌚𑌰𑌣 𑌯𑍁𑌗𑌲𑌧𑍍𑌯𑌾𑌨𑌾𑌰𑍍𑌚𑌨 𑌪𑍍𑌰𑌣𑌾𑌮𑌾𑌦𑌿𑌃 𑌅𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌪𑍍𑌰𑌿𑌯𑌃,

என்றருளிச்செய்தார். இதனர்த்தம் உலகத்துக்கெல்லாம் நன்மையை உபதேசிக்கும் வேதத்திரள்களின் தலையில் (வேதாந்தங்களில்) முக்கியமாக அறியப்படும் பொருள் என்ன வென்றால்? ஜீவன் பரமாத்மா இவர்களைப் பற்றிய உண்மைகளை யறிந்து வர்ணாச்ரம தர்மங்களை ஸரியாக அனுஷ்டித்து அவைகளை உருப்புக்களாகக்கொண்டு பரமபுருஷனுடைய திருவடிகளில்தியானம் அர்ச்சனை நமஸ்காரம் (பிரணாமங்கள்) முதலிய இவைகளைக்கறை கடந்த பிரீதியுடன் செய்யவேண்டும் என்பதே. என்று இவ்விடத்தில் முதலிய (ஆதி) என்றதினால் கீர்த்தனம் யாத்திரை முதலியவைகளும் சொல்லப் படுகின்றன. உபாஸநம். என்பதில் அர்ச்சனம் பிரணாமங்கள் முதலியன உள்ளடங்கியவைகள். பெரிய யாகத்துக்கு உறுப்பாக பிராயஜம் முதலிய சிறுயாகங்களிருப்பதுபோல் இந்த உபாஸநமாகிய உடலுக்கு வர்ணாச்சிரம தர்மங்கள் உறுப்புக்க (அங்கங்க) ளாக விருக்கின்றன.

இதில் தியானம் மனதினால் செய்யத்தகுந்தது. நாமஸங்கீர்த்தனம் வாக்கின் காரியம். அர்ச்சனை முதலியது காய (சரீர) த்தினால் ஆவது. இப்படி மூன்றுவகை உபாஸமானது

𑌮𑌨𑍍𑌮𑌨𑌾 𑌭𑌵 𑌮𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑍋 𑌮𑌦𑍍𑌯𑌾𑌜𑍀 𑌮𑌾𑌂 𑌨𑌮𑌸𑍍𑌕𑍁𑌰𑍁 |

என்னிடத்தில் பக்தியுடையவனாய் என்னை தியானம் செய்து என் பூஜையைச் செய்து என்னை நமஸ்கரி, என்றும்.

𑌸𑌤𑌤𑌂 𑌕𑍀𑌰𑍍𑌤𑌯𑌨𑍍𑌤𑍋 𑌮𑌾𑌂 𑌯𑌤𑌨𑍍𑌤𑌶𑍍𑌚 𑌦𑍃𑌢𑌵𑍍𑌰𑌤𑌾𑌃 |

எப்போதும் என்னைக் கீர்த்தனம் செய்கிறவர்களாயும் என் ஆராதனத்தைச் செய்கிறவர்களாயும் என்னிடத்தில் திருடமான விருதத்தை யுடையவர்களாயும், என்றும்

𑌶𑍍𑌰𑌵𑌣𑌂 𑌕𑍀𑌰𑍍𑌤𑌨𑌂 𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌃 𑌸𑍍𑌮𑌰𑌣𑌂 𑌪𑌾𑌦𑌸𑍇𑌵𑌨𑌂 |
𑌅𑌰𑍍𑌚𑌨𑌂 𑌵𑌨𑍍𑌦𑌨𑌂 𑌦𑌾𑌸𑍍𑌯𑌂 𑌸𑌖𑍍𑌯𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌿𑌵𑍇𑌦𑌨𑌂 |

இதி பும்ஸார்பிதா விஷ்ணௌ பக்திஶ்சேந்நவலக்ஷணா |
இத்யாதிகம் ப்ரஸித்தம் ஹி ப்ரமாணம் ஸர்வஸம்மதம் |

எங்கும் நிறைந்த விஷ்ணுவாகிய பகவானுடைய மஹாத்மியத்தைக் கேட்டல், அதைக் கீர்த்தனம் செய்தல், அவனுடைய நாமஸ் மரணம் பண்ணுதல், திருவடிகளில் கைங்கரியம் செய்தல் அர்ச்சனை, நமஸ்காரம், தாஸனுயிருத்தல், தோழன்மாதிரிபாவித்தல், தன்னுத்மாவை அர்ப்பணம் செய்துவிடுதல், இப்படி ஒன்பது விதமான பக்தியை பகவானிடத்தில் மனிதன் செய்யக்கடவன், என்றும். இவ்விஷயத்தில் சொல்லப்படும் பல பிரமாணங்கள் எல்லாராலும் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றன.

இத்தகைய அர்ச்சனை நமஸ்காரம் முதலியவை ஒருவன் யோகத்திலிழுந்து தாரணையென்னும் நிலைமையை யடையும் வரையில் யோகத்துக்கு உறுப்புகளாக (அங்கங்களாக) விருக்குமென்றும் தாரணையில் ஸித்திபெற்ற பிறகு வியுக்தமான காலத்தில் செய்யப்படும் அர்சனை முதலியவை அங்கியோடு (யோகத்தின் உடலோடு, கலந்து ஒன்ருகிவிடுமென்றும் தாத்பர்யதீபிகையில் விளக்கப்பட் டிருக்கிறது. இவ்விதமான யோகத்துக்குக் கிரியாயோகம், என்றும் பெயருண்டு. இதுவே சுதந்திரமான மோக்ஷோபாயமென்று சிலர் நிரூபித்திருக்கிருர்கள். ஸ்ரீ ராமானுஜ ஸித்தாந்தத்தில் இது பகவத்கீதை முதலிய பிரமாணங்களுக் கிணங்க பக்திஸ்வரூபத்தில் சேர்க்கப்பட்டது.

அப்யாஸேऽப்யஸமர்தோஸி மத்கர்மபரமோ பவ |
மதர்தமபி கர்மாணி குர்வந் ஸித்திமவாப்ஸ்யஸி |

அப்பியாஸ யோகத்திலும் நீ சக்தியில்லாதவனுனல் என் விஷயமான கருமங்களிலீடுபட்டுவிடு. என் பொருட்டுக் காரியங்களைச் செய்தால் அவசியம் ஸித்தியை அடைந்து விடுவாய், என்று கீதையில் சொல்லப்பட்டது.

பகவானைக் குறித்துச் சொல்லக்கூடிய இத்தகைய கர்மங்களாவன ? ஆலயங்களை நிர்மானம் செய்தல், பூந்தோட்டம் (உத்யானம்) முதலியவற்றை உண்டாக்குதல், கோவில்களில் தீபம்

போடுதல், கோவில்களைக் கழுவி சுத்தம் செய்தல், கோலம் முத லியவற்ருல் அலங்கரித்தல், புஷ்பங்களைச் சேகரித்துக் கொடுத்தல் பூஜையில் பிரவர்த்தித்தல், பிரதக்ஷிண நமஸ்காரங்களைச் செய்தல் முதலியன. ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் சக்திக்குத் தக்க படி இவற்றில் எதிலாவது ஸம்பந்தபட்டு கிருதார்த்தராவதற் காக இவை சாஸ்திரங்களில் விவரிக்கப்பட்டிருக்கின்றன. ஆக மப் பிராமாண்யம், என்னும் கிரந்தத்தில் சண்டாளர்களுக்கும் தேவாலய பாலன (ரக்ஷித்தல்) கைங்கர்யம் உண்டென்று ஸ்ரீயா முனாசாரியர் அருளிச் செய்தார்.

[பக்தி ஸுகரூபம்]

பக்தி ஆனந்த ரூபமாயிருக்கு மென்று நிரூபிப்பதற்காக ஸுகம் எப்படி இருக்குமென்பதை முற்படஅறியவேண்டும். சார் வாக மீமாம்ஸர்கள் ஸுகமில்லாமலிருப்பதே துக்க மென்ருர்கள். பௌத்தர் ஸாங்கியர் முதலியவர்கள் துக்க மில்லாமலிருப்பதே ஸுக மென்ருர்கள். தார்க்கிகர்கள் ஸுகம் துக்கம், இரண்டு மில்லாத உதாஸீந நிலைமை யென்று மூன்றுவித அநுபவங்கள் உண்டென்று ஸமர்த்தித்தார்கள். ஸ்ரீராமானுஜ ஸித்தாந்தத்தின் படியில் இம்மூன்றும் ஸம்ஸார தெசயிலுண்டு ஆனல் வாஸ்த விகமான ஸ்திதியிலும் முக்த தெசையிலும் எல்லாம் ஸுகமய மாக விருக்குமென்று நிர்ணயிக்கப்பட்டது. இதுதான் உண்மை. அநுபவிக்கத்தக்க அந்தந்த வஸ்துக்களைப் பற்றிய (விஷய) உணர் சியே (ஞானமே)ஸுகத்துக்காதிகளாகக் கடவன. இத்தகைய ஞானத்தை (உணர்ச்சியை) க்காட்டிலும் ஸுகம் துக்கம் இரண்டு மில்லாமையாகிய இவை வேறென்ன வொன்றுது. முதலில் சொல்லியபடி ஒப்புக்கொண்டால்லௌகிகவ்யவஹாரமும்சுருதிஸ் மிருதி முதலிய ஸகல பிரமாணங்களும் ஸமரஸங்களாகும்.

இப்படியானல், அநுகூலமாக உணரத்தக்கவை யெல்லாம் சுகங்கள், பிரதி கூல உணர்ச்சியைத் தருபவை துக்கங்கள், மற்ற வை இவ்விரண்டு மில்லாதவை, என்ற தாயிற்று. உபாஸநம் அல் லது பக்தியின் ரூபமும் அநுகூலமாக உணரத்தக்கதாவதால் அது ஸுகரூபமாயிருக்கு மென்று சொல்வதில் ஒரு பாதகமுமில்லை.

எனவே தான் புருஷார்த்தங்கள் நான்கு வகைப்பட்டன, என்று பிரித்துச் சொல்வது உசிதமாகிறது. இந்த நியாயத்தைக் கொண்டே ஸூத்திரகாரரும் பகவான் ஜகத்ஸ்ருஷ்டி முதலிய காரியங்களைச் செய்வதை ஸ்வயம்பிரயோஜனங்களான லீலைகளென்று சமர்த்தித்து 'பகவான் வேலை கெட்டுப்போய் இவ்வித வியாபாரங்களைச் செய்கின்றானே, என்னப்படும் பிரயோஜன ஆக்ஷேபத்தை நிரஸித் தருளினர்.

நமது ஸித்தாந்தத்தின்படி பகவதுபாஸநம் மாத்திரம் ஸுகரூபமென்பதல்ல. மேல் இதற்குப் பலமாகக் கிடைக்கும் பிரும்மஸ்வரூபமும் அந்த பிரும்மத்தினுடையது என்பதினால் பிரபஞ்சம் முழுவதும் ஸுக ரூபமாகவே யிருக்கும். முக்தி தெசையில் எல்லாம் அநுகூலமாகுமானதால் அப்போது துக்க ஸம்பந்தமே கிடையாது. எந்த அனுபவம் மனுஷ்யனுக்கு அனுகூலமோ அது தான் சுகம்.

ஆனால் பிரபஞ்சமே துக்கமயம் ஸுகமாய்க் காணப்படுவதெல்லாம் அற்பம் ஸ்திரமற்றது. துக்கத்தை மூலமாக உடையது, அனுபவ தெசையிலும் துக்கத்தோடு கலந்தது. துக்கத்திலேயே முடிவு பெறுவது. தேஹமே ஆத்மா வென்னும் மயக்கத்தோடு கூடினது. ஸ்வபாவத்திலுள்ள பகவதனுபவத்துக்கு விரோதமானது, என்ற ஏழுவித தோஷங்களுக் குட்பட்டது, என்றிப்படிகளில் சொல்லப் பட்டனவே? மேலும்.

நஹிவஸ்து ஸ்வஹாவெந வாராஷாயநுகவ ஈஸ்ராதெ |
தயாசெவ ஸவநுஷாஸவநும் ஸவெநுஷாம் ஸ்ரீவிஷ்ணுவஸ்யா |
ஸுவாயவாஸ்ராக ஊஃவாய நசெவம் கவ வ்யவஸ்யா |
உந: ஸ்ரீதிகா: ஸ்வமநு: நாகஸ்த திவயநுய: |
வஸ்துகசெவ ஊஃவாய ஸுவாயெஷ்யா மாயவ |
கொவாயவ நதஸ்ஹாக வஸ்து வஸ்வாத்மகம் கூத: |
தசெவ ஸ்ரீதயெ ஹூகூவா வாநஊநுஃவாய ஜாயதெ |
தசெவ கொவாய தத: ப்ரஸாதாயவ ஜாயதெ |
தஸ்மாதுஃவாத்மகம் நாஸ்தி ந வ கிஞ்சித் ஸுவாத்மகம் |

𑌹𑌿𑌂𑌸𑍍𑌯𑌾𑌹𑌿𑌂𑌸𑍍𑌯𑍇 𑌮𑍃𑌦𑍁𑌕𑍍𑌰𑍂𑌰𑍇 𑌧𑌰𑍍𑌮𑌾𑌧𑌰𑍍𑌮𑍌 𑌵𑍍𑌯𑌤𑌾𑌨𑍍𑌯𑌤𑍇 ।
𑌤𑌦𑍍𑌭𑌾𑌵𑌿𑌤𑌾𑌃 𑌚 𑌵𑌹𑍍𑌨𑍌 𑌤𑌤𑍍𑌸𑍍𑌵𑌾𑌦𑌃 𑌤𑌸𑍍𑌯 𑌰𑌾𑌗𑌵𑌤𑍇 ।
𑌪𑌶𑍁𑌹𑌿𑌂𑌸𑌾𑌦𑌿𑌸𑌮𑍍𑌬𑌦𑍍𑌧𑍇 𑌯𑌜𑍍𑌞𑍇 𑌤𑍁𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌹𑌿 𑌦𑍍𑌵𑌿𑌜𑌾𑌃 ।
𑌤𑍇𑌷𑍁 𑌨𑍈𑌵 𑌹𑌿 𑌯𑌜𑍍𑌞𑍇𑌷𑍁 𑌶𑌾𑌕𑍍𑌯𑌾𑌃 𑌕𑍍𑌰𑍁𑌧𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌪𑍀𑌡𑌿𑌤𑌾𑌃 ।
𑌅𑌗𑍍𑌨𑍇𑌶𑍍𑌶𑍀𑌤𑌸𑍍𑌯 𑌤𑍋𑌯𑍇𑌨 𑌦𑍃𑌷𑍍𑌟𑌾 𑌹𑌸𑍍𑌤𑌸𑍍𑌯 𑌚𑌾𑌕𑍍𑌷𑌯𑌾 ।
𑌕𑍍𑌰𑍀𑌯𑌤𑍇 𑌸𑌰𑍍𑌵 𑌕𑌟𑍁𑌤𑍍𑌵𑌂 𑌤𑌦𑍍𑌵𑌿𑌰𑍋𑌧𑌸𑍍𑌯 𑌚𑍇𑌤𑌸𑌃 ।
𑌅𑌤𑍍𑌯𑍁𑌷𑍍𑌣𑌿𑌤𑌾𑌨𑌾𑌂 𑌶𑍀𑌤𑌾𑌨𑌾𑌂 𑌪𑍍𑌰𑌾𑌯𑌾𑌦𑍇𑌨 𑌸𑌰𑍍𑌵𑌦𑍇𑌹𑌿𑌨𑌾𑌂 ।
𑌹𑍍𑌰𑌾𑌸𑌿𑌤𑌾𑌨𑌾𑌂 𑌤𑌾𑌪𑌾𑌣𑌾𑌂 𑌚 𑌹𑌾𑌰𑍋𑌽𑌪𑌿 𑌸𑌰𑍍𑌵𑌾𑌯𑌤𑍇 ।

எந்த வஸ்துவும் தன் சுபாவ குணத்தினுல் மட்டும் புருஷார்த்தம் (வேண்டப்படும் பொருள்) ஆவதில்லையே? அப்படியானுல் எல்லாம் எப்பொழுதும் எல்லாருக்கும் ஒரே மாதிரியாக ஸுகத்துக்காகவோ துக்கத்துக்காகவோ தீர்ந்ததாகக் காணப்பட வேண்டி வரும். அப்படிக் கண்டிலோம். மனதுக்கு ஸந்தோஷத்தைக் கொடுப்பதே ஸ்வர்க்கமென்றும் அதல்லாதது நரகமென்றும்கொள்ளப்படுகிறது. ஒரு வஸ்துவே ஒருவருடைய ஸுகத்துக்கும், ஒருவருடை துக்கத்துக்கும் மற்ருெருவன் பொருமைக்கும் வேறு சிலர்க்கு கோபத்துக்கும் காரணமாகிறது. எனவே, வஸ்துவே இத் தகைய ஸ்வபாவ குணங்களையுடையவை, என்பது எப்படி? ஒன்றே முதலில் பிரீதியை உண்டாக்கிப் பின்னுல் துக்கத்தையும் விளைவித்து விடுகிறது. ஆகையால் ஒன்றும்தானே துக்கமுமல்ல சுகமுமல்ல. அப்படியே ஹிம்ஸை ஹிம்ஸையில்லாதது, மிருதுவானது குரூரமானது, தர்மம் அதர்மம், ஸத்தியம், பொய், முதலியவைகளின் வ்யவஸ்தைகளும் உண்டாகின்றன. எவனெவனுக்கு எதெது ருசியாகத் தோன்றுகிறதோ அததையே அவனவன் மனதில் பாவித்து அடைய முயற்சி செய்கிறுன். பிராணி ஹிம்சை முதலியவற்ருேடு கூடின யக்ஞங்களில் பிராம்மணர் சந்தோஷ மடைகின்ருர்கள். அவற்றைக் குறித்தே சாக்கியர்கள் (பௌத்தர்கள்) மனம்நொந்து கோபமடைகின்ருர்கள். ஜலத்தால் சீதம் பண்ணப்பட்ட நெருப்

யும் பசி தணியும் பொருட்டு உட்கொள்ளப்பட்ட உணவும் ஸுகமெனப்படுகிறது. இதற்கு விபரீதமானவை துக்கமென்று மனிதரால் உணரப்படுகிறது. மிகவும் திமிர்பிடித்த அங்கங்களையுடையவர்களும் சரீர வியாபாரங்களினாலேயே ஸுகத்தை நாடுகிறவர்களும் பிராந்திக் ஞானத்தால் மூடப்பட்ட (மயக்கப்பட்ட) இந்திரியங்களை யுடையவர்களுமான மனிதர்களுக்கு பிரஹாரமும் (அடியும்) கூட ஸுகமாகத் தோற்றுகின்றது.

என்றிப்படி லோகானுபவத்தாலும் இதுதான் ஸுகம் இது தான் துக்கம், என்று நிர்ணயிக்க வழியில்லையே ? எனக் கூடும். இதற்கு சமாதானம் உண்டு. எல்லா வஸ்துக்களிலும் இரண்டு விதமான ஸ்வபாவங்களுண்டு. ஜீவர்களுடைய கருமங்களுக்கிடாகவும் காலதேசங்களின், வித்திசாஸங்களினாலும் வஸ்துக்களின் ஸ்வபாவ விசேஷங்களினாலும் ஸுக துக்கங்களின் தாரதம்யங்கள் பகவத்ஸங்கல்பத்தாலுண்டாகின்றன. எல்லா வஸ்துக்களும் எப்பொழுதும் பகவானுடையவைகள், என்னும் காரணத்தினால் அவனுக்கு அவை எல்லாமே அநுகூலங்கள் ஆனது பற்றி இந்த ஸ்வபாவத்தைத்தெரிந்த முக்தனுக்கும் எல்லாம் அநுகூலமாகவே தோன்றும். லோகானுபவத்திலும் ஒருவனுக்கு மற்றொருவன் எல்லை கடந்த பிரீதிக்கு விஷயமானால் இவனுடைய வஸ்துக்களெல்லாம் அவனுக்கும் மிகவும் போக்கியமா யிருப்பதைக் காண்கின்றோம்.

இக்காரணத்தினால் பிதா புத்திரன் பதி பத்னீ, முதலிய சம்பந்தத்தால் அவர்களுக்குள் பரஸ்பரம் கைங்கரியம் ஸுகரூபமா யிருப்பதுபோல் அதே நியாயத்தால் பகவத் கைங்கரியமும் அளவற்ற பிரீதிரூபமாகக் குறையில்லை. ஸேவையுடன் கூடிய மோக்ஷம் ஸுகரூபமல்லவென்று சிலர் சொல்லுவது லோக நியாயத்துக்கும் விரோதமான வாதமாகும்.

[பகவத்ஸேவை ஸுகரூபமானது]

எல்லா பிராணிகளுக்கும் ஸ்வாதந்திரியம் மிகவும் இஷ்டமா யிருக்கும். பாரதந்திரியமென்பதே துக்கம், என்றால் மோக்ஷத்தில் எப்போதும் பகவானுக்குப் பரதந்திரனயிருப்பது பரமதுக்கமன்றோ ?

സൎവ്വം പരവശം ദുഃഖം സൎവ്വമാത്മവശം സുഖം |
ഏതദ്വിദ്യാത് സമാസേന ലക്ഷണം സുഖദുഃഖയോഃ |

பரவசமா யிருப்பதெல்லாம் துக்கம். தன்வசமாயிருப்ப தெல்லாம் ஸுகம். இதுதான் ஸுகதுக்கங்களின் சுருக்கமான லக்ஷணம், என்றறியத் தக்கது, என்றார் மனு. (4—160) என்றால் ?

இது தேஹம் ஆத்மா இவைகளின் ஸ்வரூபங்களை யறியாதவர்கள் சொல்லும் ஆக்ஷேபம். இவர்களுக்கு, போகத்தின் பொருட்டு மனுஷ்யன் தேவன் பசு முதலிய ஜாதி குணங்களுக்கு ஆதாரமாக உண்டாகும் தேஹமே ஸ்வதந்திரமாகக்காரியங்களைச்செய்வதாகத் தோன்றும். அந்ததேகமே ஆத்மா. வேறு ஆத்மாவென்று கிடையாது, என்று ஸம்ஸாரிகளுக்கு தேஹத்தில் அபிமான முண்டாகும். அதற்குத் தக்கபடியே ஸுக துக்கங்களுடைய வியவஸ்தையும் (பிரிவும்) ஏற்படுகிறது. சிங்கம் புலி பன்றி, மனுஷ்யன் யக்ஷர் ரக்ஷஸ்ஸு, பிசாசு தேவர் தானவர் ஸ்திரீ புருஷன், இப்படிகளில் சரீரங்களில் வித்தியாஸங்கள் இருப்பதற்குத் தக்கபடி சுக துக்கங்களும் பரஸ்பரவிருத்தங்களாய் பல பிரகாரங்களாக வியவஸ்தை (பிரிவினை) யுடையதாகக் காணப்படும். எனவே, தேஹமே ஆத்மாவென்று பிரமிக்கும் அவர்களுக்கு சுகம் துக்கம், என்பவை வெவ்வேறு வகைகளாகவே தோன்றும்.

சாஸ்திரத்தினாலும் அனுபவத்தினாலும் ஆத்மா தேஹத்தை விட வேறுபட்டவன், என்று அறியப்படுகிறான். அவன் ஞானத்தையே உருவாக வுடையவன். பகவானுக்கே சேஷபூதன் (உரித்தான உடைமையாக விருப்பவன்) இத்தகைய ஆத்மாவை தேஹமென்று பிரமிப்பதுபோல் ஆத்மா ஸ்வதந்திரன், என்று நினைப்பதும், பிராந்தியே யொழிய வாஸ்தவமன்று. ஆத்மஸ்வரூபத்தின் உண்மையை யறிந்தவர்களுக்கு பகவானுடைய ஸேவை (கைங்கரியம்) சுகரூபமாகவே யிருக்கும். இது மேலும் விவரிக்கப்படும்.

ஆத்மா பகவானுக்குப் பரதந்திரனானாலும் இராஜ குமாரனுக்கு ராஜாவின் ஐசுவரியம் எப்படி நிரதிசயப் (அளவுகடந்த) பிரியமாகுமோ, அப்படியே பகவானுடைய சகல ஐசுவரியங்களும்

முக்த ஜீவனுக்கு நிரதிசயப் பிரியமாகவே இருக்கும். பகவான் லீலா ரஸத்தையும் நித்தியானந்தத்தையும் அனுபவிப்பதுபோல் முக்தாத்மாவும் பகவானுக்குச் சமானமான ஆனந்தத்தை அநுபவிக்கிறான். என்று ஸ்ரீபாஷ்யத்தில் ஸ்ரீராமானுஜர் பல விடங்களில் நிரூபித்திருக்கிறார். ஸ்ரீபாஷ்யம் (4—4—1)

யதா² ஸ்வப்நே ஈஶ்வரஸ்ருஷ்டை: ரதா²த்³யை: கரணை: ஜீவோ ரமதே | ததா² முக்தோऽபி லீலாப்ரவ்ருத்தேநேஶ்வரேண ஸ்ருஷ்டை: பித்ருலோகாதி³பி⁴: லீலாரஸம் ரமதே | பர: பரமபுருஷோऽபி மநுஷ்யத⁴ர்ம லீலாரஸம் யதா² ரமதே ததா² முக்தாநாமபி ஸ்வலீலாயை பித்ருலோகாதி³கம் ஸ்வயமேவ ஸ்ருஜதி கதா³சித் | கதா³சித்து முக்தா: ஸத்யஸங்கல்பா: பரமபுருஷ லீலாநுகு³ண ஸ்வபித்ருலோகாதி³கம் ஸ்வயமேவ ஸ்ருஜந்தி |

எப்படி ஸ்வப்பனத்தில் ஈசுவரனால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட ரதம் முதலிய கருவிகளினால் ஜீவன் ஸுகத்தை யனுபவிக்கிறானோ, அப்படியே முக்தனும் லீலையில் துடங்கிய ஈசுவரனால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட பிருதிலோகம் முதலியவைகளினால் லீலா ரஸத்தை யநுபவிக்கிறான். பரம புருஷனும் மனுஷ்ய தர்மங்களை யொட்டிய லீலா ரஸத்தை யநுபவிப்பதுபோல் தன் லீலையின் பொருட்டே முக்தர்களுக்கும் பிதிரு லோகாதிகளைத்தானே சிலசமயங்களில்ஸ்ருஷ்டிக்கிறான். சில சமயங்களில் முக்தர்களே ஸத்திய ஸங்கல்பர்கள் (நினைத்ததை முடிக்கும் சக்தியுள்ளவர்கள்) ஆகையால் பரம புருஷனின்லீலைக்குட்பட்டு பிதிரு லோகாதிகளை ஸ்ருஷ்டித்துக் கொள்கிறார்கள். என்று.

இதன் வியாக்கியானத்தில்

வ்யூஹ ஸம்ப³ந்தி⁴ லீலாவிஶேஷஸ்யாநந்த³கத்வம் வ்யூஹிண: ப்ரியதமத்வாதிஶய நிப³ந்த⁴நம் | கதா²ந வ்யூஹிண: ப்ராப்யத்வமேவ மாஹாத்ம்யம் |

பிரும்மத்துக்கு ஸம்மந்தப்பட்ட லீலை ஜீவனுக்கு அநுகூலமாகத் தோற்றுவதற்குக் காரணம் பிரும்மம் (பகவான்) மிகவும் பிரியமாக விருப்பதால். ஆகையால் பிரும்மமே ஜீவனால் அடையத் தக்கவன், என்பதற்கு விரோதமில்லை, என்று விவரிக்கப்பட்டது.

[ஸ்ரீராமானுஜ தர்சனத்தின் அதிசயம்]

இவ்வளவால் உரைக்கப்பட்டதில் இது ஸாராம்சம். இந்தப் பிரபஞ்சம் அத்யந்தம் துக்கமயமென்றும் ஹேயம் (அருவருக்கத் தகுந்தது) என்றும் எல்லா மதஸ்தர்களும் சொல்லுகிறார்கள். இந்த துக்கமயமான பிரபஞ்சத்தை அடியோடு நாசம் செய்வதற்கு (விட்டொழிப்பதற்கு) அது துக்க மென்றும், ஸ்வலக்ஷணமென்றும், க்ஷணிகமென்றும், சூன்யமென்றும் நான்குவித பாவனைகளைச் செய்ய வேண்டுமென்று உபதேசித்து பௌத்தர்கள் தங்கள் ஸித்தாந்தத்தை ஸ்தாபித்திருக்கிறார்கள். இதற்கு எதிராக ஸாங்கியர் முதலானவர்கள் பிரபஞ்சம் துக்க மயமாக விருந்தாலும் அதின் சம்பந்தத்தை ஒழித்து கொள்ளவேண்டியது அவசியம், என்று தீர்மானித்தார்கள். மற்ற ஸித்தாந்திகளும் ஏறக்குறைய இவ்விரண்டு ஸித்தாந்தங்களிலேயே அடங்கி விடுகிறார்கள்.

ஸ்ரீராமானுஜ ஸித்தாந்தத்திலோ வென்றால்? பிரபஞ்சம் உண்மையானது. நித்தியமானது (அழியாதது) பகவானுக்கு லீலா ஐசுவர்யமாக விருப்பது. அவனுடைய லீலா ரஸத்துக்கு அனுகூலமாயிருப்பது. எப்பொழுதும் அநுகூலமாகவே அறியப்படுவது. முக்தர்களுக்கும் ஆனந்த ரூபமாகவே யிருப்பது. ஸ்வபாவத்தில் ஸுகரூபமானது. ஆனால் ஜீவனுடைய கர்மமாகிற பகவத் ஸங்கல்ப்பத்தால் சில சமயங்களில் சுகமாயும் சில சமயங்களில் துக்கமாயும் காணப்படுவது. கர்மபெந்தம் கழிந்தால் எப்போதும் ஸுகமாய் விருப்பத்தக்கதாகவே யிருப்பது. பகவதாத்மகம் (பகவானுக்கு உடலாய் அவனை உள்ளுயிராகக் கொண்டது) என்பதினால் பிரபஞ்சம் ஆதரிக்கத் தக்கதே யன்றி பரிஹரிக்க (ஒழிக்க)த் தக்கதல்ல, என்று இப்படிகளில் நிரூபிக்கப் பட்டிருக்கிறது. ஆகையால் இது ஸர்வானுகூல்ய ஸித்தாந்தம், என்று

பெயர் பெற்றது. அதாவது? எல்லாவற்றையும் அநுகூலமாகப் பார்ப்பது, என்றதாயிற்று.

மோக்ஷ தெசையில் பிரபஞ்சம் அநுகூலமயமாக விருந்தாலும் ஸம்ஸார தெசையில் அதை விலக்கவேண்டியது தானே? என்றால், இவ் விடத்திலேயே நாம் பகவானுக்கு லீலா ரஸத்தை யுண்டாக்கிக் கொண்டு மோக்ஷதெசையில் பண்ணப்போகிற கைங் கரியத்துக்கு முளையான கைங்கரியங்களைச் செய்து ஆனந்தானு பவம் பண்ணலா மாகையால் இதுவே பிரபஞ்சத்தில் நாமிருப்ப தின் பிரயோஜனமாகிறது. இவ் வர்த்தம் பூர்வாசாரியர்களால் அநேக பிரகாரமாக அநுஸந்திக்கப்பட்டது. ஸ்ரீராமநுஜரின் கெத்யத்தில் பகவான் வாக்கியத்தில்

க்ஷைவ ஸ்ரீரங்கே ஸுகமாஸ்வ |

இங்கேயே ஸ்ரீரெங்கத்தில் ஸுகமாக வஸித்துக் கொண்டிரு என்று சொல்லப்பட்டது.

ஸ்ரீரங்கே ஶரதஶ்ஶதம் ஸஹ ஸுஹ்ருத்பௌத்ர நிக்ஷேபகம் நிதுர்ஸ்தேவம்ஸு ஸுவம் வ தாஸ்ய ரஸிகாம் ஸுக்ஷாவஸ ஷ்டிம் வராம் |

யுஷ்மத்பாத ஸரோஜாஹாஸா ரஜஸ்ஸ்யாத்மவோவாஸிதா ஸவந்ஞம்வக்ஷ ஶ்ஶிக்ஷவஶ்வ ஹவநஃ ஷ்வீகாவந்ஷஸ்ராக்ருவாம்||

ஓ பகவானே! ஸ்ரீரங்கத்தில் நூறு வருஷங்களும் சிநேகிதர் முத லானவர்களோடு தடையற்றதும் துக்கமில்லாததும் சுகரூபமனா உம்முடைய கைங்கர்ய ரஸம் நிறம்பிய மேலான ஸ்மிருத்தியை யனுபவித்துக்கொண்டு உம்முடைய பாத தூளிகளாக இருக்கக் கடவோம். நீரே எங்களுக்குத் தாயும் தந்தையும் மற்றெல்லாமும் புகலிடம். ஆகையால் உமது நிர்வியாஜமான கிருபையை எங் கள் திரத்தில் புரிவீராக.

நிரஞ்ஜநம் நிவிருஶ்தஜ்ஞேயம் கஸ்ருஷ்டி விஞாவஷ ஶாஹி ரஞ்ஜிவ்யம் |

ஸத்யம் ஶபே வாரணஶைலநாத வைகுண்டவாஸேऽபி நமேऽபிலாஷ: |

ஓ ஹஸ்திகிரி நாதனே !

மனதுக்கெட்டாத தேவரீருடைய திருமேனியின் வடிவழகை இடைவிடாமல் அனுபவித்துக்கொண்டு வருகிற அடியேனுக்கு வைகுண்டவாஸத்தில் கூட ஆசைகிடையாது. ஸத்தியமாகச் சொல்லுகிறேன். (தேசிகன்)

த்வம்சேத் ப்ரஸீதஸி தவாஸ்மி ஸமீபதஶ்சேத்
த்வய்யஸ்தி பக்திரநகா கரிஶைலநாத |
ஸம்ஸஜ்யதே யதி ச தாஸஜனஸ்த்வதீயை:
ஸம்ஸார ஏஷ பகவந்நபவர்க ஏவ |

ஓ பகவானே! அத்திகிரி நாதனே! தேவரீரும் அடியேனைக் கடாக்ஷித்து தேவரீர் சமீபத்திலும் நானமர்ந்து தேவரீருடைய தாஸஜனங்களுடைய ஸஹவாஸமும் எனக்குக்கிடைத்துவிட்டால் இந்த ஸம்ஸாரமே மோக்ஷமன்றோ ? (தேசிகன்) என்றிவை முதலிய ஸ்ரீஸூக்திகள் பராமர்சிக்கத் தக்கவை.



# ஐந்தாம் அத்தியாயம்

## மோக்ஷ ஸாம்ராஜ்யம்

[பிரும்மானந்தத்தை நிரூபிக்கும் வழி]

மோக்ஷத்தில் பிரும்மானுபவம் ஆனந்த ரூபமாக விருக்கு மென்னப் பட்டது. உலகத்தில் பிராணிகள் அநேக விதமான விசித்திர ருசிகளையுடையவர்களாகையால் அந்தந்த மனிதரின், ருசிக்கு அனுகுணமாக ஆனந்த ஸ்வரூபத்தை உபதேசிக்கவேண்டி யிருக்கிறது. இதை யொட்டியே உபனிஷத்துக்கள் மோக்ஷானு பவத்தைப் பலவிதமாக உபதேசித்திருக்கின்றன.

இவ்விடத்தில் ஸ்ரீ மாதவாசாரியர் சொல்லியிருக்கும் ஒரு பீடிகை கெவனிக்கத்தக்கது. அத்வைத ஸித்தாந்தத்தின் படி யில் பிரும்மமானது பிரபஞ்சத்தின் வடிவில்லாததாயும் (ஜகதா கார சூன்யமாயும்) சூன்யமல்லாததாயு மிருக்குமென்று குரு உபதேசித்ததைக்கேட்ட சிஷ்யன், ஜெகதாகார சூன்யமாயும் சூன்யமல்லாததாயு மிருக்கும் வஸ்துவை மனத்தால் நினைப்ப தெப்படி? என்று வினவ, குருவும் எப்படி ஒரு வாக்கியத்தால் கேள்வை கேள்க்கிறாயோ அப்படியே வாக்கியத்தின் அர்த்தத்தை மனதில் வைத்துக்கொண்டு தியானம்செய். பிரும்மத்துக்கு ஸமானமான வஸ்து வேறு கிடையாதாகையால் திருஷ்டாந்தம் சொல்ல முடியாது. பிரும்மத்தை அறிவதற்கு ஏதாவது ஒரு வழி காட்டவேண்டுமென்றால் அயர்ந்த (காட) தூக்கத்தின் நிலை மையைக் காட்டலாம். ஆனந்தம் எப்படி யிருக்குமென்றால் அதற்கு உதாஹரணமாக இஷ்டமான விஷயானுபவத்தை நிர் தேசிக்கலாம். சம்சயம் நிவிருத்தியாக வேண்டுமானால் சாரீரகமீ மாம்ஸா சாஸ்திரத்தைப் படிக்கவேண்டும். என்று பெதில்கூறி னார். என்று.

எனவே, பிரும்மானுபவமானது உலகத்தில் அறியப்படும் அனுபவங்களைக் காட்டிலும் வேறானதென்ற தாயிற்று. இதை உலக அனுபவங்களைக் கொண்டே தெரிந்துகொள்வதற்காக ஜீவ

னுக்கும் ஈசுவரனுக்கும் நாயிகா நாயகபாவம், பிதிருபுத்திரபாவம், ஸ்வாமி (எஜமானன்) பிருத்திய (ஸேவக) பாவம், குரு சிஷ்ய பாவம், லக்ஷ்ய (குறி) போதக (புத்தம் செய்கிறவன்) பாவம், என்று பலவித ஸம்பந்தங்கள் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன.

ரூபேண ஸுந்தரேண குணை: பரயா ஸம்ருத்த்யா ஹாவை ர்கம்பீரமதுரைர்வா மஹிம்நா |

தாத்ருக் தாத்ருகிதி ஸ்தவ வசாம்ஸ்யபந்யா: வாசோ யதீய விபவஸ்ய திரஸ்க்ரியாயை |

ரூபத்தாலும் கல்யாண குணங்களினாலும் எல்லாவற்றுக்கும் மேற்பட்ட ஐசுவரியத்தாலும் கெம்பீரமாயும் மதுரமாயுமுள்ள மனோபாவங்களினாலும் அல்லது மஹிமையாலும் அப்பேர்ப்பட்டவன் இப்பேர்ப்பட்டவன், என்று வர்ணிக்கிற வாக்குக்களெல்லாம் எந்த பரபிரும்மத்தினுடைய வைபவத்தை மறைக்கும் பொருட்டு உண்டாயினவோ, என்றார்கள்.

[சிருங்காரம்]

இவ் வனுபவங்களில் நாயிகா(ஸ்திரீ) நாயக (புருஷன் பாவம் உலகத்தில் பிரஸித்தமான சிருங்கார ரஸத்தை முன்னிட்டு பிரும்மானந்தத்தைக் காட்டுகிறது. ஆகையால் தான் அலங்காரசாஸ்திரக்காரர்களும் ரஸமானது பிரும்மானந்தத்துக்குச் சமானம், என்று நிரூபிக்கிறார்கள். இதைச் சில உபனிஷத்துக்கள்பேசின. இதன் பிரகாரத்தில் முதலில் பிரும்மத்தைப்பற்றிய சிரவணம் (கேட்டல்) பிறகு அதில் ஆசையின் மிகுதியால் பிரும்மத்தை நேரில் காணுதல், அதன்மேல் அதை அனுபவிக்கவேண்டு மென்னும் உத்கட (அளவுகடந்த) அபேக்ஷை பிறத்தல், பின்னர் அனுபவானந்தம், என்று இவை படிப்படியாக வருகின்றன. இவ்வனுபவம் வந்த பிறகு எப்போது மிருக்கும், ஈசுவரனோடு ஸமான போகமாகவிருக்கும். ஈசுவரனும் ஜீவனும் பரஸ்பரம் நிரதிசய அநுகூலர்களாகவே இருந்துகொண்டு ஐசுவரியங்களில் ஒருவித விபாகமுமில்லாமல் லீலாபோக ஐசுவரியங்களை இடைவிடாமல் ஒரே மாதிரியாக அனுபவிப்பார்கள், என்று, இவ்விஷயத்தில் வசனங்கள்.

𑌨𑌾𑌯𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 𑌪𑍍𑌰𑌵𑌚𑌨𑍇𑌨 𑌲𑌭𑍍𑌯𑌃 𑌨𑌮𑍇𑌧𑌯𑌾 𑌨 𑌬𑌹𑍁𑌨𑌾 𑌶𑍍𑌰𑍁𑌤𑍇𑌨 |

𑌯𑌮𑍇𑌵𑍈𑌷 𑌵𑍃𑌣𑍁𑌤𑍇 𑌤𑍇𑌨 𑌲𑌭𑍍𑌯𑌃 𑌤𑌸𑍍𑌯𑍈𑌷 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌵𑌿𑌵𑍃𑌣𑍁𑌤𑍇 𑌤𑌨𑍂𑌂 𑌸𑍍𑌵𑌾𑌂 |

இந்தப் பரமாத்மா படிப்பினுலோ புத்தியினுலேயோ மிகுந்தவேதா த்தியயனத்தினுலோ அடையப்படமாட்டான். எந்த ஜீவனையே அவன் வரிக்கிருனே அவனுலேயே அடையப்படுவான். அவனுக்கே அந்தப் பரமாத்மா தன் ரூபத்தை (உடம்பை)க் காட்டுகிருன். இது கடோபனிஷத்திலும் முண்டகோபனிஷத்திலும் படிக்கப்பட்டிருக்கிறது. இங்கு பிரார்த்தனையைச் சொல்லுகிற வ்ரு, (வரித்தல்) என்னும் வினைப்பகுதி யிருப்பதால் ஜீவனுக்கும் பிரும்மத்துக்கும் பரஸ்பரம் பிரார்த்தனை யிருக்கவேண்டுமென்ற தாயிற்று. அதிருந்தால்தான் தன்னுடம்பை (தனுவை)க் காட்டும்படியாகும். தனுபதம் தன்வீ (மங்கை) என்னும் பதத்தையும் ஸூசிப்பிக்கும். ஆகையால் இங்கு சிருங்காரரஸம் தெளிவாகச் சொல்லப்பட்டதென்னலாம். அப்படியே பிரும்மானந்தம்,

𑌯𑌥𑌾 𑌪𑍍𑌰𑌿𑌯𑌯𑌾𑌸𑌂 𑌪𑌰𑌿𑌷𑍍𑌵𑌕𑍍𑌤𑍋 𑌨 𑌬𑌾𑌹𑍍𑌯𑌂 𑌕𑌿𑌂𑌚𑌨𑌵𑍇𑌦 𑌨𑌾𑌨𑍍𑌤𑌰𑌂 |

எப்படி பத்தினியினுல் அணையப்பட்டவன் உள்ளிலும் புறம்பிலும் ஒன்றையு மறியமாட்டானே, என்று ஸ்பஷ்டமாகவே வாஜஸநேயி சுருதியில் காணப்படுகிறது. ரஸானுபவமும்,

𑌯𑌤𑍍𑌰 𑌨𑌾𑌨𑍍𑌯𑌤𑍍 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 𑌨𑌾𑌨𑍍𑌯𑌤𑍍 𑌶𑍃𑌣𑍋𑌤𑌿 𑌨𑌾𑌨𑍍𑌯𑌦𑍍𑌵𑌿𑌜𑌾𑌨𑌾𑌤𑌿 𑌸𑌭𑍂𑌮𑌾 |

எவ்விடத்தில் வேறென்றையும் காணுனே வேறென்றையும் கேளானே வேறென்றையு மறியானே அதுவே பூமா (எல்லாவற்றுக்கும் மேற்பட்டது) என்று வர்ணிக்கப்பட்டது.

புராணங்களிலும் பகவ தனுபவப்ரீதியை,

𑌯𑌾 𑌪𑍍𑌰𑍀𑌤𑌿𑌰𑌵𑌿𑌵𑍇𑌕𑌾𑌨𑌾𑌂 𑌵𑌿𑌷𑌯𑍇𑌷𑍍𑌵𑌨𑌪𑌾𑌯𑌿𑌨𑍀 |
𑌤𑍍𑌵𑌾𑌮𑌨𑍁𑌸𑍍𑌮𑌰𑌤𑌃 𑌸𑌾 𑌮𑍇 𑌹𑍃𑌦𑌯𑌾𑌨𑍍𑌮𑌾𑌽𑌪𑌸𑌰𑍍𑌪𑌤𑍁 |

அவிவேகிகளுக்கு விஷயபோகங்களில் பிரீதி எப்படி இடைவிடா மல் மிகுந்திருக்குமோ அவ்விதமாகவே தேவரீரை தியானிக்கிற எனக்கு அந்த பிரீதியானது ஹிருதயத்தைவிட்டு அகலாமலிருக் கட்டும், என்ற படிகளில் விளக்கப்பட்டது.

பகவான் தானே கீதையில்,

ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோऽத்யர்த்தமஹம் ஸ ச மம ப்ரிய: |

நான் ஞானியின் மிகுந்த பிரீதிக்குப் பாத்திரன். அவனளவில் அவனும் என் பிரீதிக்குப் பாத்திரனாகிறான், என்றருளிச் செய் தான். மேலும்,

பக்த்யா மாமபிஜாநாதி யாவாந் யஶ்சாஸ்மி தத்த்வத: |
ததோ மாம் தத்த்வதோ ஜ்ஞாத்வா விஶதே தத³நந்தரம் |

பக்தியினால் என்னை ஸ்வரூபத்தாலும் குணத்தாலும் இப்படிப்பட் டவனென்று அறிந்து அவ்வுண்மையான ஞானத்தால் பிறகு என் னுள் நுழைந்தும் விடுகிறான். என்று தன்னோடு ஒன்றுவதையும் சொன்னான்.

இப்படிப் பிரியை (நாயகி)யின் விஷயமான ஸகல வ்யவ ஹாரங்களும் படிப்படியாக அளவுகடந்து பிரியமாவதுபோல் பக்தியும் பரபக்தி, பரக்ஞானம், பரமபக்தி, என்று வளர்ந்து வரும் பிரகாரத்தை முன்பே சொன்னோம்.

இவ் விஷயத்தில் இன்னொரு உதாரணத்தைக் கவனிக்க வேண்டும். ஒரு நாயகன் சொல்லும் பிரகாரமிது.

யதேவ ரோசதே மஹ்யம் ததேவ குருதே ப்ரியா |
இதி வேத்தி ந ஜாநாதி தத்ப்ரியம் யத்கரோதி ஸா |

எனக்கு எது ருசிக்கிறதோ அதையே என் நாயகி செய்கிறாள், என்று நினைக்கிறானே யொழிய அவன் உண்மையை யறிந்தவ னல்ல. ஏனெனில்? அவள் செய்வதெல்லாமே இவனுக்கு ருசித் திருக்கிறது, என்று, இதில் நாயகியின் ஸ்தானத்தில் முக்த ஜீவாத்மாவையும் நாயகன் ஸ்தானத்தில் பகவானையும் வைத்துக் கொண்டால் முக்தன் செய்யும் காரியங்களெல்லாம் பகவானுக்கு போக்யமாகிறதென்னும் ஸாமரஸ்யம் அறியப்படும்.

[வீரரஸம்.]

வீரஸ்வபாவமுடையவர்களுக்கு பிரும்மானந்த ஸ்வரூபத்தை விளக்க சில உபனிஷத்துக்கள் புறப்பட்டிருக்கின்றன. அவை யாவன ?

𑌧𑌨𑍁𑌰𑍍𑌗𑍃𑌹𑍀𑌤𑍍𑌵𑍌𑌪𑌨𑌿𑌷𑌦𑌂 𑌮𑌹𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌂
𑌶𑌰𑌂 𑌹𑍍𑌯𑍁𑌪𑌾𑌸𑌾 𑌨𑌿𑌶𑌿𑌤𑌂 𑌸𑌂𑌧𑌯𑍀𑌤 ।
𑌆𑌯𑌮𑍍𑌯 𑌤𑌦𑍍𑌭𑌾𑌵𑌗𑌤𑍇𑌨 𑌚𑍇𑌤𑌸𑌾
𑌲𑌕𑍍𑌷𑍍𑌯𑌂 𑌤𑌦𑍇𑌵𑌾𑌕𑍍𑌷𑌰𑌂 𑌸𑍋𑌮𑍍𑌯 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 ।

ஓ ஸௌமியனே ! உபனிஷத்தில் சொல்லப்பட்ட மஹா அஸ்திரமாகிய வில்லை எடுத்துக்கொண்டு அதில் உபாஸனையினால் கூராக்கப்பட்ட பாணத்தை ஸந்தானம் பண்ணு. (தொடு) பகவானிடத்தில் வைக்கப்பட்ட மனதுடன் அதை விடுத்து அக்ஷரம் (அழிவற்றது) என்னப்பட்ட பகவானாகிய அந்த இலக்கையே அந்த பாணத்தினால் துளை செய்து விடு.

𑌪𑍍𑌰𑌣𑌵𑍋 𑌧𑌨𑍁𑌃 𑌶𑌰𑍋 𑌹𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌤𑌲𑍍𑌲𑌕𑍍𑌷𑍍𑌯𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ।
𑌅𑌪𑍍𑌰𑌮𑌤𑍍𑌤𑍇𑌨 𑌵𑍇𑌦𑍍𑌧𑌵𑍍𑌯𑌂 𑌶𑌰𑌵𑌤𑍍𑌤𑌨𑍍𑌮𑌯𑍋 𑌭𑌵𑍇𑌤𑍍 ।

பிரணவமே வில், ஜீவாத்மாவே சரம், அதற்கு பிரும்மமே இலக்கு, என்னப்படுகிறது. அவ்விலக்கைத் தவறுதலில்லாமல் துளைத்து பாணம்போல் அதோடு அதாக ஆய்விடவேண்டும், என்பது முதலியவை.

இவ் வுபனிஷத்துக்களின்படியில் ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தை பாணமாக நினைத்து அதை உபாஸனை என்கிற சாணைக்கல்லில் நன்றாகத் தீட்டி பிரணவம் (ஓங்காரம்) என்கிற குறியைக் கட்டி பரப் பிரும்மமென்கிற லக்ஷயத்தை (இலக்கை) அடித்தால் ஜீவன் அதில் புகுந்து பரப்பிரும்ம ஸ்வரூபனாகவே ஆகி அவனோடு பேதம் தெரியாதபடி அவனுடைய ஸாம்யத்தை (ஸமானமாயிருத்தலை) யடைவான், என்றதாயிற்று. இவைகளில் உபாஸநம் இந்த ரீதியில் சொல்லி யிருப்பதால் இந்த வீரரஸானுபவத்தால் வரும் ஆனந்தம் அந்த ருசியையுடையவர்களுக்கு அனுகூலமாயிருக்கும், என்று தெரிகிறது.

[பயாநகரஸம்]

இது பயம், என்றும் ஸ்வபாவத்தை முன்னிட்டது. பயத்தால் ஸ்வாமியின் கட்டளையைத் தவருமல் நடத்தவேண்டுமென்றிருக்கும் ஸ்வபாவமிது. இந்த மனோபாவம் இவ்வுபனிஷத்து வாக்கியங்களினால் அநுபவத்துக்கு வரும்.

यदिदं किंच जगत्सर्वं प्राण एजति निःसृतम् ।
महद्भयं वज्रमुद्यतं य एतद्विदुरमृतास्ते भवन्ति

இந்தப் பிரபஞ்சத்தில் காணப்படுமவற்றை யெல்லாம் பிராணன், என்னனப்பட்ட பரப்பிரும்மமே உள்ளே பிரவேசித்து நியமனம் பண்ணுகிறது. வஜ்ஜிராயுதத்தை உயரத் தூக்கி வெருட்டுவது போல் மஹாபயத்தை யுண்டாக்குகிறது. இதை அறிகிறவர்கள் மரணமில்லாதவர்களாகிறார்கள்.

भीषाऽस्माद्वातः पवते भीषोदेति सूर्यः ।
भीषाऽस्मादग्निश्चेन्द्रश्च मृत्युर्धावति पंचमः ।

இவனிடத்தில் (பரப்பிரும்மத்தினிடத்தில்) பயத்தினால் காற்று அடிக்கிறது. ஸூரியன் உதிக்கிறான். அக்கினியும் இந்திரனும் தந்தம் காரியங்களைச் செய்கிறார்கள். ஐந்தாவதாகிய யமனும் பறக்கிறான்

एतस्य वा अक्षरस्य प्रशासने गार्गि सूर्याचन्द्रमसौ विधृतौ तिष्ठतः ।

एष सेतुर्विधरणः । एषां लोकानामसंभेदाय ।

இந்த அக்ஷரனுடைய கட்டளையில் ஓ கார்க்கியே! ஸூரியனும் சந்திரனும் தரிக்கப்பட்டு நிலைநிற்கிறார்கள். இவ்வுலகங்களெல்லாம் அழிந்துவிடாமலிருக்க அவைகளுக்கு இவனே காக்கும் கரையாய்த் தாங்குகிறவனுமாகிறான் என்று,

மனுவும்,

दण्डश्शास्ति प्रजास्सर्वाः दण्ड एवाभिरक्षति ।
दण्डस्सुप्तेषु जागर्ति तस्माद्दण्डं विदुर्बुधाः ।

ஸவெ_ுா஢ணு ஜிெ_தா ஸொகஃ ஢ ுல_ுஹொஷி ஶ ுஷி_ந_ுாஃ|
஢ணுவஸு்ஹி ஹயாெ஢வ ஜமெஹ்ாமாய கலு்ெ_த |

எல்லாப் பிரஜைகளேயும் தண்டனேயே ஆளுகிறது தண்டனேயே ரக்ஷிக்கிறது. தூங்குகிறவர்களிடத்தில் தண்டனே விழித்துக் கொண்டே யிருக்கிறது. ஆகையால்தான் புத்திமான்கள் தண்டனேயை அங்கீகரித்தார்கள். உலகமெல்லாம் தண்டனேயால் ஜயிக்கப்படுகிறது. அதில்லாமல் பரிசுத்தனுயிருக்கும் மனிதன் கிடைப்பது அறிது. தண்டனேயின் பயம் இருப்பதனுல்தான் உலகம் ஸுகத்தைக்கொடுப்பதாகிறது என்ருர்.

இவை முதலிய வாக்கியங்களே விமர்சித்தால் பகவானிடத்தில் விலக்ஷணமான (சிறந்த) பயபக்தி.

பாவமுண்டாவதற்கு இது மிகவும் பயன்படத்தக்க ஒரு மார்க்க மென்று ஏற்படுகிறது. இந்த பயாநுபவத்தை இப்படி நிரூபிக்கலாம். அதாவது ? ஸேவகன் (தாஸன்) தான் தன்னுடைய ஸகல பரிவாரத்துடனும் ஸ்வாமிக்காகவே இருப்பதாக பாவிக்க வேண்டும். சீலமுடைய ஸ்வாமியும் (எஜமானனும்) தன்னுடைய எல்லா பரிவாரத்துடனும் ஸேவகனுடைய நன்மைக்காகவே யிருப்பதாகக் கருதவேண்டும். இப்படி பரஸ்பரபாவனேகள் கலந்தால் அதில் வரும் ரஸாநுபவம் அவ்வவர்களுக்கேஉணரக்காணும் படியான உயர்ந்த நிலேமையிலிருக்கும். இதைப் பூர்வாசாரியர்கள் அநுபவித்த பிரகாரத்தை இந்த சுலோகங்களினுல் அறியலாம்.

வஸிஜந வஸிவஹ_ுா ஹுஷிணா஢்ாய ுயா_நி வ்ுவா
ம ுண மணாஹுஞா_ந ஶக்ு்ா஢யவெ்ூ |

வாவெ஢ ஶயாணா_நு்ா_த ெ஢ஹஷயாsு்தா வா஢ ஸகல
ெஶதக ஸஂஶிு்_தாய_ுஂ வ கய_ு |

ஹே வரதா ! உம்முடைய ஸேவகர்களென்ன நிசார் முதலியவைகளென்ன, ஞானம் சக்தி முதலிய பெருங்குணங்களென்ன, பூஷணங்கள் நகைகளென்ன, பரமபதம் அப்படியே இவ்வண்டங்களென்ன, உம்முடைய சரீரம் அப்படியே உமது ஆத்மா (ஸ்வரூபம்) என்ன, இவையெல்லாவற்றையும் உம்மை ஆச்ரயித்தவர்

களின் பிரயோஜனத்துக்காகவன்றோ செய்துவைத்திருக்கிறீர் ? என்று ஸ்ரீ கூரத்தாழ்வான் அருளிச்செய்தார். இது ஸ்வாமியின் (எஜமானின்) மனோபாவ மிருக்கும்படியைக் காட்டுகிறது. ஸ்ரீ பட்டரும்,

உவாஷெத்தெ ஸத்தாஸ்திதி நியமநாமெஷ்லூஷு விடுதள ஷூ உஷிஶஷ்ரு ஸ்ரீமாநிதிவஷதிவாமெளவநிஷதீ ।

உவாயொபெயபகெவ தஷிஹத வதகூம் நதஶஹணெள கூதவூாம் ஸ்ரீரஙெஶய ஶரண வேஶரஜ வேஜம் ।

ஹே ரங்கத்தில் பள்ளிகொண்ட பகவானே ! உபநிஷத்து வாக்கியங்கள் ஸ்ரீமானுகிய தேவரீர் எல்லா சேதனுசேதனங்களேயும் ஸத்தை (ஸ்வருபம்) ஸ்திதி (இருப்பு) நியமனம் (ஏவுதல்) முதலியவைகளைக் கொடுத்து தேவருடைய பிரயோஜனத்துக்காகவே உபயோகப்படுத்திக் கொள்ளுகிறீர்கள், என்று சொல்லுகின்றன. எனவே, தேவரீரே மோக்ஷத்துக்கு உபாயமாயும் மோக்ஷத்தில் உபேயமாகவும் (அடையப்படவேண்டியவரென்றும்) சொல்லப்படுவது தேவரீருடைய தத்துவம் (உண்மையான ஸ்வரூபம்) வெறுங்குணங்களல்லவென்று தீர்மானமாகிறது. ஆகையால், ஒருவிதமான வியாஜத்தையும் (நிபந்தனையையும்) கோலாமல் அடியேன் தேவரீரைச் சரணமடைந்தேன், என்று தாஸனுக்கு (ஸேவகனுக்கு) இருக்கவேண்டிய மனோபாவத்தை விளக்கியருளினுர். இதில் ஜீவன் தான் பகவானுடைய உபயோகத்துக்காகவே ஏற்பட்டிருப்பவனுகையால் பகவத் கைங்கரியத்தை தனக்கு இயற்கையான வியாபாரமென்று நினைத்து ஆனந்திக்கவேண்டியவன், என்று தெரியவருகிறது.

[வாத்ஸல்ய ரஸம்]

இது பிதாவுக்கும் புத்திரனுக்கும் இருக்கும் பாவத்தால் நிருபணம் செய்யப்படுகிறது. இந்த ஸந்தர்ப்பத்திலேயே மதாசாரியர்கள் வழிதப்பிப்போன ராஜ குமாரனின் திருஷ்டாந்தத்தைச் சொல்லுகிறுர்கள். உபநிஷத்திலும் ஜீவர்கள் "கஸஸ்ரதா: கூமாரகா:, (எண்ணிறந்த குமாரர்கள் சிறுவர்கள்) என்று பேசப்படுகிறுர்கள். வழிதப்பிப்போய் வேடர்குலத்தில்வளர்ந்த

ராஜகுமாரன் கதையை ஸ்ரீ சங்கராசாரியரும் ஸ்ரீ பாஸ்கராசாரியரும் ஸ்ரீ ராமானுஜாசாரியரும் ஸ்ரீ வேதாந்தாசாரியரும் அவரவர்களுடைய கிரந்தங்களில் உதாஹரித்திருக்கிறார்கள். ஸ்ரீ சங்கராசாரியர் இந்த உபாக்கியானத்தை (கதையை) ஸம்பிரதாயம் தெரிந்தவர்கள் சொல்லுகிறார்கள், என்று உரைப்பதால் இது தொன்றுதொட்டு பஹுஜனங்களால் அங்கீகரிக்கப்பட்டதென்று தெரிகிறது. இந்த உதாரணத்தின் ஔசியத்தையும் பூர்வாசாரியர்கள் பலபடிகளில் பேசியிருக்கிறார்கள்.

ஸார்வபௌமனான ஒருராஜா தன் அந்தப்புரம் பரிவாரங்கங்கள் முதலியவர்களுடன் வேட்டைக்குச் சென்றிருந்தபோது காட்டில் விளையாடிக்கொண்டிருந்த வார்த்தைகூட வறியாத ராஜகுமாரன் வழிதப்பி எங்கேயோ ஒரு வேடுவச் சேரியில் எடுத்தார் கைப்பிள்ளையாய் வேடரோடு வேடராய் வளர்ந்து அவர்களுடைய ஊணையே உண்டு அவர்களுடைய ஹீநமான தொழில்களையே கற்றும் செய்தும் தான் ராஜகுமாரன், தன்னுடைய போகங்களும் அலுவல்களும் வேறு, என்பதை அடியோடு மறந்து கிடந்தவந்தான். இப்படி வெகுகாலம் சென்றது. அரசன் குமாரனைக் காணுமல் அவனைத் தேடத் தன் பரிஜனங்களை யனுப்பினான். ஒரு சமயத்தில் இவர்களுக்கு இந்த வேடுவச் சேரியில் வளரும் குமாரன் தென்பட்டான். பின் அவர்களும் அவனுக்குத் தன் பிறப்பு உரிமை முதலியவைகளைத் தெரிவித்துத் தன் பிதாவிடம் சென்று ராஜபோகங்களை யனுபவிக்க வேண்டுமென்னும் ஆசையை உண்டாக்கினார்கள். இவனைக் கண்ட வரலாற்றை அரசனுக்கும் தெரிவித்து அவனுக்கும் பிள்ளையைக் காணவேண்டுமென்னும் த்வரையையுண்டாக்கினார்கள். இவர்கள் சகாயத்தால் பிதாவும் குமாரனும் ஒன்று சேர்ந்து பிதாவின் புத்திரவாத்ஸல்யத்தால் புத்திரனுக்கு யௌவ்வராஜ்ய பட்டாபிஷேகம் கிடைத்தது. இப்படியே அநாதிகர்மத்தின்பலனாய் ஜீவன்தான் பகவானுக் குரித்தான அழிவில்லாத ஞானஸ்வருபன், என்பதை மறந்து பிரகிருதியாகிற தேஹமே எல்லாம், என்று அதைச் சேர்ந்த சிற்றின்பங்களில் உழன்று தன்ஸ்வரூபம், பகவத் ஸம்பந்தம், தனக்கு பிறப்புரிமை போலுள்ள பகவத் கைங்கரியம், பிரும்மானந்தம், முதலியவற்றை

அறியாமல் இழந்து கிடக்க ஒருக்கால் தன் பூர்வபுண்ய மொன்றின்பலனாக நல்ல ஆசாரியர்களுடையவும் பாகவதர்களுடையவும் ஸஹவாஸ உபதேசாதிகள் நேர்ந்து அவற்றின் மூலமாக பகவத் கிருபையையும் நித்தியமான மோக்ஷானந்தத்தையு மடைகிறான், என்று இந்தக் கதையின் உபதேசம்,

மாதா பிதாக்களுக்குப் புத்திரர்களிடத்தில் உள்ளவாத்ஸல்யத்தையும் (அன்பையும்) புத்திரர்களுக்கு அவர்களிடத்தில் உள்ள பக்தியையும் பரஸ்பரம் அநுஸந்தானம் செய்வதால் அனுபவிக்கப் படும் ரஸம் இங்கு பிரும்மானந்தத்துக்கு அறிகுறியாகக் காட்டப் படுகிறது.

இதை பகவான் கீதையில்,

𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌮𑌿𑌤𑌿 𑌸𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌾 𑌸𑍁𑌦𑍁𑌰𑍍𑌲𑌭𑌃 |

வாஸுதேவனே எல்லாமென்றிருக்கும் அத்தகைய மஹாத்மா மிகவும் அரியவன், என்றருளிச்செய்தார். இதனால் ஸாதாரணமாய் மனிதர்கள் தங்கள் தங்கள் ருசியின்படி மனதில் பாவனை செய்கிறார்களேயன்றி யதார்த்தத்தை உணர்ந்து பகவானிடத்திலேயே எல்லாவித பாவனைகளையும் செய்கிறதில்லை, என்னும் பொருள் கிடைக்கிறது.

அர்ஜுனனும் பகவான்சொன்னபடியே அவனை ஸாக்ஷாத்காரம்பண்ணி,

𑌤𑍍𑌵𑌮𑍇𑌵 𑌮𑌾𑌤𑌾 𑌚 𑌪𑌿𑌤𑌾 𑌤𑍍𑌵𑌮𑍇𑌵
𑌤𑍍𑌵𑌮𑍇𑌵 𑌬𑌨𑍍𑌧𑍁𑌶𑍍𑌚 𑌗𑍁𑌰𑍁𑌸𑍍𑌤𑍍𑌵𑌮𑍇𑌵 |
𑌤𑍍𑌵𑌮𑍇𑌵 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌦𑍍𑌰𑌵𑌿𑌣𑌂 𑌤𑍍𑌵𑌮𑍇𑌵
𑌤𑍍𑌵𑌮𑍇𑌵 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌮𑌮 𑌦𑍇𑌵 𑌦𑍇𑌵 |

தேவதேவனே! தேவரீரே எனக்குப் பிதாவும் அன்னையும் பெந்துவும் குருவும். தேவரீரே எனக்கு வித்யையும் தனமும் மற்றெல்லாமும், என்றனுசிந்தித்தான்.

பூர்வாசாரியர்களும்,

𑌪𑌿𑌤𑌾 𑌤𑍍𑌵𑌂 𑌮𑌾𑌤𑌾 𑌤𑍍𑌵𑌂 𑌦𑌯𑌿𑌤 𑌤𑌨𑌯𑌸𑍍𑌤𑍍𑌵𑌂 𑌪𑍍𑌰𑌿𑌯𑌸𑍁𑌹𑍃𑌤𑍍
𑌤𑍍𑌵𑌮𑍇𑌵 𑌤𑍍𑌵𑌂 𑌮𑌿𑌤𑍍𑌰𑌂 𑌗𑍁𑌰𑍁𑌰𑌸𑌿 𑌗𑌤𑌿𑌶𑍍𑌚𑌾𑌸𑌿 𑌜𑌗𑌤𑌾𑌂 |

க்ஷீய ஸ்ஜூ த்யூவ வஸிஜநஸுஜதிரஹம் வூவணமெ்ரு வம் ஸதுஹவேித வெவாஸீஹி ஹா: ।

ஸ்ரீ ஆளவந்தார்.

தேவரீரே தந்தையும் தாயும் அருமைப் புதல்வனும் நண்பனும் ஸ்நேகிதனும் குருவும் உலகத்துக்கெல்லாம் கெதியாயுமிருப்பவர். அடியேன் தேவரீரின் உடைமையும் அடிமையும் ஸேவகனுமாக விருக்கிறேன். தேவரீரையன்றி எனக்குவேறு கெதியில்லே. ஆன துபற்றி தேவரீரைச் சரணமடைந்தேன். தேவரீரே என்னேக்காப் பாற்றவேண்டிய பாரத்தை ஏற்றுக்கொள்ளவேண்டும் படியாயு மிருக்கிறேன், என்கிறபடிகளில் அநுஸந்தித்தார்கள்.

இந்தப்பிரகாரம் பகவானிடத்தில் அன்புவைத்து எவ்வளவுக் கெவ்வளவு மோக்ஷ ஐசுவரியத்தை விஸ்தரித்து அநுஸந்தானம் செய்கின்ருேமோ அவ்வளவுக்கவ்வளவு பகவானுடைய ஐசுவரிய மான இந்தப் பிரபஞ்சத்தைப் பற்றவும் நமது பிரீதியானது விருத் தியாகும். பிரபஞ்சத்தின் விஷயத்தில் நமது அன்பு அதிகரிப்ப தற்குத்தக்கபடி அதைக்குறித்து நாம் நடந்துகொள்ளவேண்டிய முறைகளும் இருக்கவேண்டுமென்று நமது ஸித்தாந்தம் உபதே சிக்கிறது. இதுமற்ற மதங்களின் உபதேசங்களேவிட தனிப்பட்ட ஏற்றத்தை யுடையதாக விருக்கிறது. முக்தனுடைய ஸகலவித ஆனந்தானுபவமும் பகவானுக்கு ஆனந்தத்தைக் கொடுக்கக்கூடிய தாகையால் அவை பகவானுடைய கைங்கரியங்களேயாகக்கடவன.

[புராணங்களில் நிரூபணம்]

இவ்விதமாக உபனிஷத்துக்களில் சொல்லப்பட்ட அபிப்பிரா யத்தை இதிஹாஸ புராணங்கள் பல பிரகாரங்களில் விவரித்தன. இவைகளேச்சுருக்கி,

காமாெ்ராவெ்யா ஹயாக் கංஸ: வெஷாவ்ரூாஃயொநூ வா: । ஸංவுநாஜுஷயொ யுஃயං ஸெஹா்ஷ்கூாவயං வ ஹெ।। யெநகெநாவூாவாயெந ஸංவுநஸு தாவாவந:॥

(நாரதர்.)

காமத்தினல் கோபிகளும் பயத்தினல் கம்ஸனும் துவேஷத்தினல் சிசுபாலன்முதலிய அரசர்களும் விருஷ்ணி வம்சத்தவர்களாகிய

நீங்கள் ஸ்ரீகிருஷ்ணனோடு கூடல் துவக்காலும் ஸ்நேஹத்தாலும் பக்தியாலும் நாமும் (ஓ பிரபுவே! உம்மை) அடைந்தோம். ஏதோ ஒரு உபாயத்தினால் (தேவரீருடைய) ஸம்பந்தம்கிடைத்தால் அதுவே எல்லாவற்றையும் பரிசுத்தம்செய்யும், என்று சொல்லப் பட்டது.

இத்தகைய பகவதனுபவத்தை ஸகலரும் எளிதாக அறிந்து கொள்ளும்பொருட்டு விஷயானுபவத்தை முன்னிட்டு அவதார கதைகளைவர்ணிக்கும்போது ராஸக்கிரீடைமுதலிய அதிசயோக்திகள் புராணங்களில் பேசப்படுகின்றன. இக்கதைகளைப் பற்றிய ஆக்ஷேபஸமாதானங்களும் அங்கங்கேயே பலவிதமாகக் காணப் படுகின்றது.

ஸ்ரீ பாகவதத்தில் ராஸக்கிரீடை விருத்தாந்தத்தில் பகவான் திறத்தில் சொல்லப்படும். தோஷத்தை ஸ்ரீ சுகரே ஆக்ஷேபித்துக் கொண்டு அதற்கு ஸமாதானமும் அருளிச்செய்கிறார். பகவான் ஸர்வேசுவரன் எல்லாருக்கும் ஆத்மா (உயிர்) ஆகையால் அவன் நடவடிக்கைகளைப்பற்றி தோஷம் சொல்ல வொண்ணாதென்றும் பிறர்க்கில்லாத தன்னுடைய அபூர்வமான மாயையைக் காட்டினாரென்றும் இந்தக்கதையைக் கேட்கிறவர்களுக்கு பகவானிடத்தில் நிரதிசய (அளவற்ற) பிரீதி பிறப்பதற்காக இப்படிச் சொல்லப் பட்டதென்றும் ஸமாதானங்கள் சொல்லப்பட்டன.

அங்கேயே,

யா: ஶ்ருத்வா தத்³வ்ரொஹவெஶ |
நாஸூயந் க²லு க்ருஷ்ணாய மோஹிதாஸ்தஸ்ய மாயயா |
மந்யமாநா: ஸ்வபார்ஶ்வஸ்தா²ந் ஸ்வாந் ஸ்வாந் தா³ராந் வ்ரஜௌகஸ: |

(இடைப்பாடியிலிருந்தவர்கள்) இக்கதைகளைக் கேட்டு மனதை கிருஷ்ணனிடமே செலுத்தினவர்களானார்கள்.

கிருஷ்ணனுடைய மாயையினால் மோஹமடைந்தவர்களாய் அவனிடத்தில் அஸூயைப்படாமல் தங்கள் தங்கள் பக்கத்திலேயே தங்கள் தங்கள் பெண்சாதிகள் இருந்துகொண்டிருப்பதாகவே அறிந்தார்கள், என்று சொல்லியிருப்பது கவனிக்கத்தக்கது.

இந்த நியாயத்தைக்கொண்டு மஹாபாரதத்தில் குந்திக்கும் பாண்டுவுக்கும் நடந்த ஸம்பாஷணைக்கு விஷயமான சுவேதகேது விருத்தாந்தம் பகவத் பக்தியை போதிப்பிக்கச் சொல்லப்பட்ட கட்டுக்கதையென்றே நம் பூர்வாசாரியர்கள் தீர்மானித்திருக்கிறார்கள். பாவப்பிரகாசிகையில் ஸ்ரீ ரெங்கராமானுஜ ஸ்வாமியின் ஸ்ரீ ஸூக்தியைப் பார்க்கவும். தந்திரவார்த்திகமென்னும் கிரந்தத்தில் குமாரிலப்பட்டர் புராணக் கதைகளைப்பற்றி,

நாதீவ உவாவ்யாநெஷு தவாஹி நிவெஶஃ காயஃ |
வெதவ ஸ்யாநாஹா ஷெநஹி வாஜீகிதௌ வாயந
வூஹஜதிஹிஃ தயெவஸ்வாக்யாநி வூணீநாநி |
வூதிவாஜ்யாநாஷு விஹிதூ வாஜி கவாசு யாகூடு வெ
தசு |

உபாக்கியானங்களின் உண்மைகளைப்பற்றி அதிகப் பிடிவாதம் காட்டக்கூடாது. வேதப்பிரஸ்தானங்களிலிருந்தன்றோ வால்மீகர் வியாஸர் முதலியவர்களால் அவைகளை யொட்டியே தங்கள் தங்கள் வாக்கியங்களும் சொல்லப்பட்டன. சொல்லப்படவேண்டியவர்கள் அநேகவித விசித்திர புத்திகளை யுடையவர்களாகையால் இது மிகவும் யுக்தமாகவே யிருக்கின்றது என்று சொன்னது கெவனிக்கத்தக்கது. அக்கதைகள் போதிக்கிற நீதிகளைப் பொருள்படுத்த வேண்டுமேயன்றி கதைபாகத்தை நுட்பமாகச் சீர்தூக்கக் கூடாது, என்றதாயிற்று. கோபிகள் விருத்தாந்தத்தைப்பற்ற ஸ்ரீ வேதாந்த தேசிகன் சததூஷணியில் சொல்லியிருப்பதாவது ? கோபிகள் ஜன்மாந்தரத்தில் பகவானை யனுபவிக்கவேண்டி விரதம் செய்திருந்தபடியாலும் அவர்கள் அப்ஸரஸ்ஸுக்களானபடியாலும் அவர்களுடைய நடவடிக்கைகளுக்கு தோஷமில்லை, என்னப்பட்ட ஸமாதானத்தை அநுவதித்துவிட்டுப் பிறகு 'பகவான் நந்தகோகுலத்தி லிருந்தகாலத்தில் இடையனாகவே அபினயம் செய்துகொண்டிருந்தபடியால் அங்கு வர்ணாச்ரம தர்மங்களின் அநுஷ்டானம் அவசியமில்லை. பிறகு மதுரைக்கு வந்த மேல் க்ஷத்திரிய தர்மத்தை அபினயம் செய்துவந்தபடியால் அக்காலத்திய பகவதனுஷ்டானம் சாஸ்திர ஸம்மதமாகவே யிருந்தது

என்று விசேஷ ஸமாதானமொன்றை அருளிச்செய்தார். அப்போது பகவான்

> க்ருதோதக: க்ருதஜப: ஹுதாக்நிஸ்ஸமலங்க்ருத: |
> தத உத்யந்த மாதித்யம் உபாதிஷ்டத மாதவ: |

லெக்ஷ்மீபதியாகிய ஸ்ரீ கிருஷ்ணன் விதிப்படி ஸ்நானம் ஜபம் அக்னிஹோத்திரம், முதலியவற்றைச் செய்து நல்ல அலங்காரங்களையும் பண்ணிக்கொண்டு உதயத்தில் ஸூரியனை வழிபட்டருளினார், என்று கர்மானுஷ்டானம் செய்தது ஸூசிப்பிக்கப்பட்டது.

பகவான் தானும் அர்ஜுனனைநோக்கி,

> ந மே பார்த்தாஸ்தி கர்தவ்யம் த்ரிஷு லோகேஷு கிஞ்சந |
> நாநவாப்தமவாப்தவ்யம் வர்த்த ஏவ ச கர்மணி |

பார்த்தனே ! மூவுலகிலும் நான் செய்யவேண்டுவதொன்றுமில்லை. எனக்குக் கிடையாத தொன்றில்லை. கிடைக்க வேண்டியது மில்லை. ஆனால் விதிப்படி கருமங்கள் நடத்தியே வருகிறேனல்லவா ? என் றருளிச்செய்தார்.

மேலும் அசுவத்தாமன் அஸ்திரத்தால் தெஹிக்கப்பட்ட உத்தரையின் கெர்ப்பத்திலிருந்து பரீக்ஷித்து மஹாராஜனைக் காப்பாற்ற சக்கிராயுதத்தை விடும்போது பகவான் சபதம்பண்ணினதை வர்ணிக்குமிடத்தில்,

> அஶ்வத்தாமாஸ்த்ர பாவக விப்லுஷ்ட விராட்தநயா கர்ப ஜீவநாவஸரே, ஸாதிக ஷோடஶ ஸ்த்ரீ ஸஹஸ்ர ரஸிகோ ப்ருந்தாவந விஹாரீ, வல்லவீ ப்ருந்த நிவிஷ்ட யௌவநாரம்போ பகவாந் ஸ்வயமேவோவாச |

> யதி மே ப்ரஹ்மசர்யம் ஸ்யாத் ஸத்யம் ச மயி திஷ்டதி |
> அவ்யாஹதம் ஐஶ்வர்யம் தேந ஜீவது பாலக: |

பதினாறாயிரம் ஸ்திரீகளோடு ரஸித்தவனும், பிருந்தாவனத்தில் விளையாடினவனும், கோபஸ்திரீகளின் மத்தியில் வெளிக்காட்டிய யௌவனத்தை யுடையவனுமான பகவான் தானே 'எனக்கு பிரும்மசர்ய முண்டானால் ஸத்தியம் என்னிடம் நிலைத்திருந்தால்

என் ஐசுவரியமும் குறைவற்றிருக்குமேயானால் இந்த பாலகன் பிழைக்கட்டும்" என்று சபதம் பேசினர், என்று சொல்லப்பட்டது. இதைப் பார்த்தால் பாகவத கிருஷ்ணன் வேறு பாரத கிருஷ்ணன் வேறு, என்று சில லௌகிகர்கள் சொல்லும் விபாகம் கூட ஒரு படியில் யுக்தமாகவே காணப்படுகிறது.

இப்படியே விஷ்ணு லோகத்தில் பகவானுடைய வாசற்காப்பவராகிய ஜயவிஜயர்கள் துர்வாஸரிடம் சாபம்பெற்ற விருத்தாந்தம் முதலியவையும் வைதிகன் பிள்ளைகள் இருந்தபடியே ஸ்ரீ வைகுண்டத்துக்குக் கொண்டுபோகப்பட்டு ஸ்ரீ கிருஷ்ணனால் மீண்டும் இவ்வுலகத்துக்குக் கொண்டுவரப்பட்ட கதையும் இவை பற்றச் சொல்லப்படும் ஆக்ஷேப ஸமாதானங்கள் மற்றோரிடத்தில் விஸ்தரிக்கப்பட்டிருக்கின்றன.

---

# ஆ று ம் அ த் தி யா ய ம்.

## பகவத் கைங்கரியம்

[தர்மம்]

भूः पादौ यस्य नाभिर्वियदसुरनिलश्चन्द्रसूर्यौ च नेत्रे, कर्णावाशाः शिरो द्यौर्मुखमपि दहनो यस्य वास्तेयमब्धिः । अन्तःस्थं यस्य विश्वं सुरनरखगगोभोगिगन्धर्वदैत्यैः, चित्रं रंरम्यते तं त्रिभुवनवपुषं विष्णुमीशं नमामि ॥

பூமி இரண்டு பாதங்களாயும் ஆகாசம் தொப்புளாயும் காற்று பிராணனாயும் சந்திர ஸூரியர்கள் கண்களாயும் திக்குகள் காதுகளாயும் ஆகாசம் தலையாயும் அக்னியே முகமாயும் மஹா ஸமுத்திரமே இருப்பிடமாயும், இப்படி மூவுலகங்களையும் தன் சரீரமாகக் கொண்டும் எவனுள் பிரபஞ்சம் முழுமையும் உளதோ, எவன் தேவர் மனுஷ்யர் பக்ஷி பசு நாகங்கள் கெந்தர்வர் தைத்தியர் முதலானவர்களைக் கொண்டு பிரபஞ்ச லீலையை யனுபவிக்கின்றானோ. அந்த விஷ்ணுவாகிய ஸர்வேச்வரனை நமஸ்கரிக்கின்றேன்.

न सा सभा यत्र न सन्ति वृद्धाः, वृद्धा न ते ये न वदन्ति धर्मम् । नासौ धर्मो यत्र न सत्यमस्ति, न तत् सत्यं यच्छलेनानुविद्धम् ॥

எங்கு பெரியோர்களில்லையோ அது ஸபையாகாது. தர்மத்தை யுரைக்காதவர்கள் பெரியோர்களாகார். ஸத்திய மில்லாதது தருமமு மல்ல. வஞ்சனை கலந்ததும் ஸத்தியமாகாது.

இவ்வுலகத்தில் எல்லா வஸ்துக்களும் எல்லா அபிப்பிராயங்களும் மாறி மாறிக்கொண்டே வெகு விதமாய் வித்தியாஸப்பட்டுக்கொண்டும் வருகிற தென்பது எல்லாராலும் ஒப்புக்கொள்ளப்பட்டது. இந்த அபிப்பிராயத்தை யனுசரித்தே தர்மாதர்ம லக்ஷணங்களும் பற்பல பிரகாரங்களாக வேறுபடுகின்றன வென்றால் அது ஆச்சரியமன்று. இதுபற்றியே இந்த பாரதபூமியில் ஆர்ய

**ஸம்பிரதாயத்திலேயே தர்ம ஸ்வரூபம் வெகுவிதமாக விகல்ப்பிக்கப்பட்டிருக்கிறது.**

𑌦𑍇𑌶𑌭𑍇𑌦𑌾𑌤𑍍 𑌕𑌾𑌲𑌭𑍇𑌦𑌾𑌤𑍍 𑌪𑍁𑌂𑌭𑍇𑌦𑌾𑌚𑍍𑌚𑌾𑌨𑍍𑌯𑌥𑌾𑌨𑍍𑌯𑌥𑌾 ।
𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌰𑍍𑌥𑌾𑌃 𑌇𑌤𑍍𑌯𑌾𑌹𑍁𑌰𑍍𑌮𑌨𑍍𑌵𑌾𑌦𑌯𑌃 ।

**தேச பேதத்தாலும் கால பேதத்தாலும் புருஷ பேதத்தாலும் சாஸ்திரார்த்தங்கள் வெவ்வேறு விதங்களாக முடிவு பெறுகின்றன, என்று மனு முதலியவர்கள் சொன்னார்கள். என்னப்பட்டது.**

**இப்படியானாலும் நமது சித்தாந்த திருஷ்டியால் பராமர்சித்துப் பார்த்தால் ஸநாதன் தர்மங்களிலும் வர்ணாச்ரம தர்மங்களிலும் யக்ஞயாகாதி தர்மங்களிலும் மோக்ஷஸாதன தர்மங்களிலும் எல்லாவற்றிலும் தொடர்ந்து வரும் தத்துவம் பரோபகாரமே, என்று நிர்ணயிக்கப்படுகிறது. இதுதான் பகவதாராதனமென்றும் பகவத் கைங்கரியமென்றும் மோக்ஷ ஸாம்ராஜ்யமென்றும் நிரூபணமாகிறது. மனு,**

𑌧𑍃𑌤𑌿𑌃 𑌕𑍍𑌷𑌮𑌾 𑌦𑌮𑍋𑌽𑌸𑍍𑌤𑍇𑌯𑌂 𑌶𑍌𑌚𑌮𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌨𑌿𑌗𑍍𑌰𑌹𑌃 ।
𑌦𑌾𑌨𑌂 𑌦𑌮𑍋 𑌦𑌯𑌾 𑌕𑍍𑌷𑌾𑌨𑍍𑌤𑌿𑌃 𑌦𑌶𑌕𑌂 𑌧𑌰𑍍𑌮𑌲𑌕𑍍𑌷𑌣𑌂 ।

**தைரியம் பொறுமை அடக்கம் திருட்டில்லாமை சுத்தி இந்திரியங்களை யடக்குதல் தானம் தன்னடக்கம் தயை பொறுமை, என தருமத்தின் லக்ஷணம் பத்துவகைப்படும், என்றும், யாக்ஞ வல்க்கியரும் இவ்வர்த்தத்தைய அஹிம்ஸையையும் சேர்த்து,**

𑌅𑌹𑌿𑌂𑌸𑌾 𑌸𑌤𑍍𑌯𑌮𑌸𑍍𑌤𑍇𑌯𑌂 𑌶𑍌𑌚𑌮𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌨𑌿𑌗𑍍𑌰𑌹𑌃 ।
𑌦𑌾𑌨𑌂 𑌦𑌮𑍋 𑌦𑌯𑌾𑌕𑍍𑌷𑌾𑌨𑍍𑌤𑌿𑌃 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌂 𑌧𑌰𑍍𑌮𑌸𑌾𑌧𑌨𑌂 ।

**என்றும் ஸநாதன தர்மங்களை விவரித்தார்கள்.**

**இவைகளைப் பராமர்சித்தால் எல்லாம் பரோபகாரத்தால் முடிவு பெறும் ஆத்ம குணங்கள்தான் ஸநாதன தர்மங்களென்றதாயிற்று. வர்ணாச்ரமதர்மத்தை நிஷ்கர்ஷம் செய்திருக்கும் ஸர்வக்ஞான மாதவாசாரியார்,**

X 𑌚𑌤𑍁𑌰𑍍𑌣𑌾𑌮𑌪𑌿 𑌵𑌰𑍍𑌣𑌾𑌨𑌾𑌂 𑌆𑌚𑌾𑌰𑍋 𑌧𑌰𑍍𑌮𑌪𑌾𑌲𑌕𑌃 ।
𑌆𑌚𑌾𑌰𑌭𑍍𑌰𑌷𑍍𑌟𑌦𑍇𑌹𑌾𑌨𑌾𑌂 𑌭𑌵𑍇𑌦𑍍𑌧𑌰𑍍𑌮𑌃 𑌪𑌰𑌾𑌙𑍍𑌮𑍁𑌖𑌃 ।

நான்கு வர்ணங்களுக்கும் ஆசாரமே தர்மத்தைக் காப்பது ஆசாரமில்லாத தேஹத்தை யுடையவர்களுக்கு தர்மம் பராங் முகமாய் விடும். முகங்கொடா தென்றபடி என்றதினல் சிஷ்ட ஸம்மதமான தயா தாக்ஷிண்யம் விநயம் இவைகளோடு கூடின நடத்தையே ஆசாரமெனப் பட்டது. இவ்வாசாரமே சுருதிஸ்மிருதி இவைகளினல் விதிக்கப்பட்ட தர்மங்களைக் காப்பாற்றும். எப்படியெனில் ? இவ்வித ஆசார மில்லாவிட்டால் ராகம் துவேஷம் கோபம் அஸூயை முதலியவை விருத்தியாய் தர்மத்தின் பிரவிருத்திக்குத் தடையுண்டாகும். ஒரு வேளை பிரவிருத்தியுண்டானும் தருமமே பின்னடையும்படியாகும். ஆகையால் ஆசாரம் தர்ம பாலகம் என்னத் தட்டில்லை. இது நான்கு வர்ணங்களுக்கும் பொதுவாயிருக்கும். ஆகவே வர்ணாச்ரம தர்மங்களும் பரோபகாரத்திலேயே முடிவு பெறுகின்றன வென்பதை விரிக்க வேண்டுவதில்லை.

தபஸு முதலிய நிவிருத்தி தர்மங்களும்கூட பரோபகாரத்தில் முடிகின்றனவென்று கூர்ம புராணத்தில் சொல்லப்பட்டது. சரீரத்தை உலர்த்துதல் தபஸல்ல. அஹிம்ஸை ஸத்திய வசனம் பிறர்க்கனுகூலமா யிருத்தல் பொறுமை தயை இவையன்றோ தபஸென்று மேதாவிகள் சொன்னர்கள், என்று பராசரமாத வீயத்தில் (1-62) உதாஹரிக்கப்பட்டது.

𑌅𑌹𑌿𑌂𑌸𑌾 𑌸𑌤𑍍𑌯𑌵𑌚𑌨𑌮𑌾𑌨𑍃𑌶𑌂𑌸𑍍𑌯𑌂 𑌦𑌮𑍋 𑌘𑍃𑌣𑌾 ।
𑌏𑌤𑌤𑍍 𑌤𑌪𑍋 𑌵𑌿𑌦𑍁𑌰𑍍𑌧𑍀𑌰𑌾 𑌨 𑌶𑌰𑍀𑌰𑌸𑍍𑌯 𑌶𑍋𑌷𑌣𑌂 ।

[ஈசுவரரூபம்]

அனுக்கிரஹகம் முதலிய சக்திகளையுடைய பகவானை ஒப்புக்கொள்ளுகிற பரமவைதிகர்கள் சுருதிஸ்மிருதி புராணம் இதிஹாஸம் முதலியவற்றில் சொல்லப்பட்டபடியே பரமேசுவரனை ஸர்வக்ஞன் ஸர்வ சக்தன் பரம காருணிகன் எல்லா வஸ்துக்களிலும் வியாபித்திருப்பவன் எல்லாவற்றையும் நியமனம் பண்ணுகிறவன் எல்லாவற்றுக்கும் மேற்பட்டவன் சகல கல்யாண குணங்களுக்கும் இருப்பிடமானவன் சகல தோஷங்களாலும் தொடப்படாதவன், என்றறிவார்கள். அவனுடைய முதல் ரூபமே பிரபஞ்சம்(விச்வம்)

ஆகையால் அவனுக்கு விச்வரூபன், என்று பெயர். புருஷ ஸூக்தத்தில் பகவானை.

ஸஹஸ்ரஶீர்ஷா புருஷ: ।

புருஷன் ஆயிரம் தலையுடையவன் என்று சொல்லியிருக்கிறது. ஸஹஸ்ர நாமத்திலும்,

விஶ்வம் விஷ்ணு: ।

விச்வமே விஷ்ணு, என்று ஆரம்பத்திலேயே பகவான். ஸ்துதிக்கப் படுகிறான். வேதாந்த மென்னும் பதத்தின் அர்த்தத்தை யனுசரித்து வேதத்தின் கடைசியான வாஜஸநேய உபனிஷத்திலும் பகவத்கீதாதி சாஸ்திரங்களிலும் பிரபஞ்சமே பகவானுடைய முதல் ரூபமென்று தெரிவிக்கப்பட்டிருக்கிறது. அது பகவானுக்கு மிகவும் இஷ்டமான ரூபம் என்றும் அதற்கு உபகாரம் செய்வதே தனக்கு ஆராதனம் என்று அவன் நினைப்பதாயும் தெரியவருகிறது. அவ்வுபனிஷத்தின் ஆரம்பத்தில்,

ஈஶாவாஸ்யமிதம் ஸர்வம் ।

இந்த பிரபஞ்சமெல்லாம் ஈசுவரனுக்கு வஸிக்குமிடமாயிருக்கிறது, என்று சொல்லப்பட்டது. பகவத்கீதையிலும்,

ஈஶ்வர: ஸர்வபூதாநாம் ஹ்ருத்தேஶே(அ)ர்ஜுந திஷ்டதி ।

ஓ அர்ஜுனா! எல்லா பிராணிகளுடைய ஹிருதயத்திலும் ஈசுவரன் நிலைத்திருக்கிறான், என்றும்,

ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி ஸந்நிவிஷ்ட: ।

எல்லாருடைய ஹிருதயத்திலும் நான் இருப்பையுடையவன், என்றும்,

ஸர்வபூத குஹாஶய: ।

எல்லா பிராணிகளுடையவும் ஹிருதயகுகை அவனுக்கு இருப்பிடம், என்றும்,

மயி ஸர்வமிதம் ப்ரோதம் ஸூத்ரே மணிகணா இவ ।

நூலில் மணிக்கணங்கள்போல் என்னிடத்தில் இவையெல்லாம் கோர்க்கப்பட்டிருக்கின்றன, என்றும்,

ஸர்வபூதநிவாஸோ<ஸி வாஸுதேவ நமோ<ஸ்து தே

ஓ வாஸுதேவனே! தேவரீர் எல்லா பிராணிகளுக்கும் வாஸஸ்தானமாயிருக்கிறீர்கள். தேவரீருக்கு நமஸ்காரம், என்றும் இவ்வர்த்தம் பலபடிகளில் பேசப்பட்டது. விஷ்ணுபுராணத்திலும்

ஜகதேதந்மஹாஶ்சர்யம் ரூபம் யஸ்ய மஹாத்மந: ।
தேநாஶ்சர்யவரேணாஹம் பவதா க்ருஷ்ண ஸங்கத: ।

ஹே கிருஷ்ண! மஹா ஆச்சரியமான பிரபஞ்சமானது அத்தகைய மஹாத்மாவான பரப்பிரும்மத்தின் ரூபமாயிருக்கிறது. அந்த மேன்மையான ஆச்சரியத்தோடு கூடின பிரும்மமாகிய தேவரீரோடு அடியேன் இப்போது சேர்ந்தேன், என்று கூறப்பட்டது.

[பகவதாராதனம்]

இத்யாதிவசனங்களால் பரமேசுவரன் எல்லாவற்றுக்கும் உள்ளுயிராயிருப்பவன் (ஸர்வசரீரீ) என்றும் சரீரியாகிய ஆத்மாவை அதன் உடம்பின் (சரீரத்தின்) மூலமாகவே பூஜிக்கவேண்டியது போலவும் பிதிருக்களை பிராம்மணர் மூலமாக பூஜிக்கவேண்டியது போலவும் பகவானை அவன் சரீரமாகிய லோகத்தின் மூலமாயே ஆராதிக்கவேண்டும், என்று ஏற்படுகிறது. மேலும்,

யாநி யாநி ஸர்வாணி பூதாநி பகவத்வபு: ।
தஸ்மாத்தாந்யாநுகூல்யம் வை கர்தவ்யமிதி நிஶ்சய: ।
யேந கேநாப்யுபாயேந யஸ்ய கஸ்யாபி தேஹிந: ।
ஸந்தோஷம் ஜநயேத் ப்ராஜ்ஞ: ததேவேஶ்வரபூஜநம் ।

சராசரங்களாகிய பிராணிகளெல்லாம் பகவானுடைய சரீரங்கள். ஆகையால் அவைகளுக்கெல்லாம் அனுகூலத்தைச் செய்வதே கடமை, என்று தீர்மானிக்கவேண்டும். நன்றாயுணர்ந்தவன் எந்த வித உபாயத்தை நாடியாவது எந்தப்பிராணிக்காவது ஸந்தோஷத்தை உண்டாக்கக்கடவன். அதுவே, ஈசுவரனுடையபூஜை, என்ற வசனங்களால் உலகத்துக்கு ஸந்தோஷத்தைச் செய்விப்பதே பகவானுக்கும் ஸந்தோஷமாகிறதென்று ஸ்பஷ்டமாகிறது.

இப்படியானால் கோவில்களில் அர்ச்சாவிக்கிரஹ ஆராதனம் முதலியவை வேண்டுவதில்லையோ வென்றால் அவ்வாராதனமும்

அஹிம்ஸை அஸ்தேயம் (திருட்டுஇல்லாமை) முதலிய ஆத்ம குணங்களில் தானம், என்னும் குணத்தைமுன்னிட்டு பகவானுக்கு ஆராதனமாவதால் இதுவும் லோகோபகாரகமாகவே ஆகின்றது. நாம் பகவானுக்கு ஸமர்ப்பணம் பண்ணுகிறகோவில் குளம் புஷ்பம் சந்தனம் தூபதீபநைவேத்தியங்கள் முதலியவையெல்லாவற்றையும் அணுவளவும் தமக்காக வைத்துக்கொள்ளாமல் தம் பக்தர்களுக்கே விநியோகப்படுத்துகிறானன்றோ? சாஸ்திரம் இப்படியேதான் சொல்லுகிறது. இதனால் லோகதிருஷ்டியாலும் பகவதபிப்பிராயம் தெரிவிக்கப்படுகிறது. பக்தன் தனதெல்லாவற்றையும் ஸ்வாமிக்கு ஸமர்ப்பிவிக்கவேண்டும். ஸ்வாமியும் தன் ஐசுவரியத்தையெல்லாம் தன்னை யடைந்தவர்க்கு (ஆச்ரிதர்க்கு) உபயோகப்படுத்தவேண்டும். என்று.

இத்தகைய பகவதாராதனம்தான் திரவியயக்ஞம், என்பது. ஞானம் தயை தாக்ஷிண்யம் முதலிய குணங்களைக் காட்டிலும் மனுஷ்யஸ்வபாவத்தில் ஊன்றிக்கிடக்கும் லோபகுணத்தை விட்டறுக்கை வெகு கஷ்டமாகையால் எல்லாசாஸ்திரங்களும் விசேஷமாகக் கொண்டாடுகின்றன. உதாரணமாக ஸப்தரிஷி ஸம்வாதத்தில்,

> யஜ்ஞாயார்த்தம் ஸஞ்சயோ யஸ்ய த்ரவ்யாணாம் ஸ ப்ரயத்னதஃ|
> தபஸ்ஸஞ்சய ஸவாஸௌ விஶிஷ்டோ த்ரவ்யஸஞ்சயஃ |

தர்மத்தின்பொருட்டு எவன்செய்யும் திரவியச்சேர்க்கை சிலாகிக்கப்படுகிறதோ, அத்தகைய உயர்ந்த பணக்குவியலானது அவனுக்கு தபஸ்ஸின் குவியலேயாகிறது. என்றும், மனுஸ்மிருதியில் (11-8)

> யோऽஸாதுப்யோऽர்த்தமாதாய ஸாதுப்யஸ்ஸம்ப்ரயச்சதி |
> ஸக்ருத்வா ப்லவமாத்மானம் ஸந்தாரயதி தாவுபௌ |

எவன் அஸாதுக்களிடமிருந்து தனத்தைப்பற்றி ஸாதுக்களுக்களிக்கின்றானோ, அவன் தன்னை ஓடமாக்கிக்கொண்டு அவ்விருவரையும் (ஸம்ஸாரக்கடலை) தாண்டும்படிசெய்கிறான், என்றும் சொல்லப்பட்டிருப்பவைகளைப் பராமர்சிக்கலாம். அசுவமேத பர்வத்திலும்

ராகாத்3ய பூதம் ஹ்ருத3யம் வாக3ந்ருதாதி3ரஹிதா |
ஹிம்ஸாதி3 ரஹித: காய: கேஶவாராத4நம் பரம் |

ஆசை முதலியவை தொடாதமனது. பொய் முதலானவைகளால் அசுத்தமாகாத வாக்கு. ஹிம்ஸை முதலானவையோடு ஸம்பந்தப்படாத சரீரம், என்றிவை மூன்றும் கேசவனுடைய ஆராதனங்களாகின்றன. என்று மூன்று கரணங்களாலும் செய்யக் கூடிய பகவத் பூஜை சொல்லப்பட்டது,

வாக்3த3ண்டோ3(அ)த2 மநோத3ண்ட3: காயத3ண்ட3ஸ்ததை2வ ச |
யஸ்யைதே நியதா த3ண்டா3: த்ரித3ண்டீ3தி ஸ உச்யதே |

எவனுக்கு வாக்கு தண்டம், (வாக்கில் அடக்கம், சரீர தண்டம், தீச்செயல்களைச் செய்யாமை, மனதின் தண்டம், கெட்ட நினைவில்லாமை, ஆகிய இவை மூன்றும் நிலை பெற்றிருக்கின்றனவோ அவனே திரிதண்டி ஸந்யாஸி, எனப்படுவான். என்னும் வசனத்தையும் கவனிக்கலாம். இப்படியே காஞ்சனமாலீ வாக்கியமும்.

த4ர்மம் ப4ஜஸ்வ ஸததம் த்யஜ ஸத்த்வஹிம்ஸாம் |
ஸேவஸ்வ ஸாது4புருஷாந் ஜஹி காமஶத்ரும் |
அந்யஸ்ய தோ3ஷகு3ணசிந்தநமாஶு முஞ்ச |
ஸத்யம் வதா3(அ)ர்ச்சய ஹரிம் ஸ்வஜநுர்ப4வாப்தம் ||

எப்போதும் தர்மத்தையடை. பிராணி ஹிம்ஸையைவிடு. ஸாது ஜனங்களோடு சேர்ந்து பழகு, காமமாகிற விரோதியைக்கொல்லு. பிறருடைய தோஷகுணங்களைப்பேசுதலை யகற்று. உண்மையையே உரை. இவ்விதமாக பகவான் ஹரியைப் பூஜை செய். அதனால் இந்த ஜன்மம் படைத்ததின் பலத்தைப்பெறு, என்றிருக்கிறது. இவ்வித வசனங்கள் அநந்தங்களிருக்கின்றன. இவற்றால் முக்கியமாக அறியப்பட வேண்டுவதென்ன வென்றால்? ஆத்மகுணங்களை விருத்திபண்ணி ஜகத்துக்கு உபகாரம் பண்ணுவதே உத்தமமான பகவதாராதனம், என்று.

[முன்னோர்களின் அநுஷ்டானம்]

பூர்வர்களான மஹான்களின் அநுஷ்டானத்தைப் பார்த்தாலும் இவ்வர்த்தம் பிரகாசமாகிறது. இதிஹாஸ ஸமுச்சயத்தில் முதலத்தியாயத்தில்,

𑌪𑍍𑌰𑌾𑌯𑌶𑍋 𑌮𑍁𑌨𑌯𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑍇 𑌕𑍇𑌵𑌲𑌾𑌤𑍍𑌮𑌹𑌿𑌤𑍋𑌦𑍍𑌯𑌤𑌾𑌃 ।
𑌦𑍍𑌵𑍈𑌪𑌾𑌯𑌨𑌸𑍍𑌤𑍁 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌹𑌿𑌤𑌾𑌰𑌤𑌃 ।
𑌸𑍍𑌤𑍁𑌤𑍍𑌯𑌂 𑌤𑌸𑍍𑌯𑌾𑌸𑍍𑌤𑌿 𑌕𑌿𑌂 𑌵𑌾𑌨𑍍𑌯𑌦𑍍𑌯𑍇𑌨𑌲𑍋𑌕𑌹𑌿𑌤𑍈𑌷𑌿𑌣𑌾 ।

𑌵𑍇𑌦𑌾𑌦𑍍𑌧𑍃𑌤𑍍𑌯 𑌕𑍃𑌤𑌂 𑌚𑌾𑌪𑌿 𑌮𑌹𑌾𑌭𑌾𑌰𑌤𑌮𑌦𑍍𑌭𑍁𑌤𑌂 ।
𑌸𑌰𑍍𑌵𑍇 𑌤𑌰𑌨𑍍𑌤𑍁 𑌦𑍁𑌰𑍍𑌗𑌾𑌣𑌿 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌭𑌦𑍍𑌰𑌾𑌣𑌿 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑍁 ।
𑌇𑌤𑍍𑌯𑌾𑌶𑌂𑌸𑌾 𑌸𑌰𑍍𑌵𑌵𑍇𑌦𑌾𑌰𑍍𑌥𑌸𑌾𑌰𑌮𑍇𑌤𑍇𑌨 𑌦𑌰𑍍𑌶𑌿𑌤𑌾𑌃
𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌨𑍍𑌤𑍁 𑌶𑍍𑌰𑌾𑌵𑌿𑌤𑌾𑌨𑌯𑌨𑍍𑌤𑍁 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌨𑍍𑌤𑍁 𑌦𑌰𑍍𑌶𑌯𑌿𑌷𑍍𑌯𑌤𑌃 ।
𑌶𑍍𑌰𑍂𑌯𑌤𑌾𑌂 𑌸𑌿𑌂𑌹𑌨𑌾𑌦𑍋𑌽𑌯𑌮𑍃𑌷𑍇𑌸𑍍𑌤𑌸𑍍𑌯 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 ।
𑌧𑌰𑍍𑌮𑍇 𑌚𑌾𑌰𑍍𑌥𑍇 𑌚 𑌕𑌾𑌮𑍇 𑌚 𑌮𑍋𑌕𑍍𑌷𑍇 𑌚 𑌭𑌰𑌤𑌰𑍍𑌷𑌭 ।
𑌯𑌦𑌿𑌹𑌾𑌸𑍍𑌤𑌿 𑌤𑌦𑌨𑍍𑌯𑌤𑍍𑌰 𑌯𑌨𑍍𑌨𑍇𑌹𑌾𑌸𑍍𑌤𑌿 𑌨 𑌤𑌤𑍍𑌕𑍍𑌵𑌚𑌿𑌤𑍍 ।
𑌇𑌦𑌂 𑌪𑍁𑌣𑍍𑌯𑌮𑌿𑌦𑌂 𑌪𑌾𑌪𑌮𑌿𑌤𑍍𑌯𑍇𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌪𑌦𑌦𑍍𑌵𑌯𑍇 ।
𑌆 𑌚𑌣𑍍𑌡𑌾𑌲𑌂 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌾𑌣𑌾𑌮𑌲𑍍𑌪𑌂 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌪𑍍𑌰𑌯𑍋𑌜𑌨𑌂 ।
𑌶𑍍𑌰𑍂𑌯𑌤𑌾𑌂 𑌧𑌰𑍍𑌮𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌵𑌂 𑌯𑌦𑍁𑌕𑍍𑌤𑌂 𑌗𑍍𑌰𑌨𑍍𑌥𑌕𑍋𑌟𑌿𑌭𑌿𑌃 ।
𑌪𑌰𑍋𑌪𑌕𑌾𑌰𑌃 𑌪𑍁𑌣𑍍𑌯𑌾𑌯 𑌪𑌾𑌪𑌾𑌯 𑌪𑌰𑌪𑍀𑌡𑌨𑌂 ।

ஸாதாரணமாய் ருஷிகளெல்லாம் தாம் கடைத்தேறுவதிலேயே முயற்சியுள்ளவர்களாக யிருக்கிறார்கள். வியாஸபகவானோ வென்றால் எல்லா பிராணிகளுடையவும் நன்மையிலீடுபட்டவர். வேறு எவ்விதமாயவரை ஸ்துதிப்பது? உலகத்தின் நன்மை யொன்றையே அபேக்ஷித்த அவரால் வேதத்திலிருந்து பிறித்தெடுத்து அற்புதமான மஹாபாரதம் செய்யப்பட்ட தன்றோ? எல்லோரும் கஷ்டத்தை தாண்டட்டும், எல்லோரும் உயர்ந்த பேற்றையடையட்டும் என்று நினைத்தல்லவோ வேதார்த்தங்களனைத்தையும் மஹாபாரதத்திலவர் காட்டியருளினார். அவற்றையெல்லாம் நன்றாய் விளக்கவேண்டுமென்றல்லவோ அவராசைப்பட்டது? மஹாத்மாவாகிற அந்த ரிஷியின் ஸிம்மநாதத்தைக் கேளுங்கள். ஓ பரதக்களிரே! அரம் பொருள் இன்பம் வீடு, எனப்படுமவைகளைப் பற்ற இந்த பாரதத்தில் சொல்லப்பட்டவைகளே மற்றவிடங்களிலுள. இதிலில்லாதது வேறு எங்குமில்லை. இதுவே புண்ணியம். இதுவே பாபம், என்கிற இரண்டுமொழிகளில் சண்டாள பரியந்த

மாக வறியும்படி சாஸ்திரத்தின் பிரயோஜனம் சுருங்கச் சொல்லப்பட்டுவிட்டது. கோடிக்கணக்கான கிரகந்தங்களால் சொல்லப்பட்ட தருமங்களின் திரண்ட பொருளைக்கேள். அதுதான் பரோபகாரமே புண்யம் பிறரை வருத்துவதே பாபம், என்னப்பட்டது, என்று ஜகதநுக்கிரஹமே ஈசுவர ஆராதனமென்று பிரகாசமாய்ச் சொல்லப்பட்டது.

இப்படியே ஸ்ரீபாகவதத்தில் ரந்திதேவமஹாராஜன் சொல்லுகிறுன்.

𑌨 𑌕𑌾𑌮𑌯𑍇𑌽𑌹𑌂 𑌗𑌤𑌿𑌮𑍀𑌶𑍍𑌵𑌰𑌾𑌤𑍍𑌪𑌰𑌾𑌂 𑌅𑌷𑍍𑌟𑌰𑍍𑌦𑍍𑌧𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌮𑌪𑍁𑌨𑌰𑍍𑌭𑌵𑌂 𑌵𑌾 । 𑌆𑌰𑍍𑌤𑍍𑌤𑌿𑌂 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑍇𑌽𑌖𑌿𑌲𑌦𑍇𑌹𑌭𑌾𑌜𑌾𑌂 𑌅𑌨𑍍𑌤𑌃𑌸𑍍𑌥𑌿𑌤𑍋 𑌯𑍇𑌨 𑌭𑌵𑌨𑍍𑌤𑍍𑌯𑌦𑍁𑌃𑌖𑌾𑌃 ।

எனக்கு ஈசுவரர்களுடைய பதவிகளும் வேண்டாம் எட்டு ஐச்வரியங்களோடு கூடின மறு பிறப்பில்லாத மோக்ஷமும் வேண்டாம். ஆனல் எல்லா பிராணிகளுடையவும் உள்ளிருந்து அவர்களுடைய கஷ்டங்களையெல்லாம் நானே அனுபவித்து அவர்களுக்கெல்லாம் துக்கமே யில்லாமலிருக்கும்படி செய்யும் நிலைமையை யடைவேனுக, என்று.

வைதிகமதத்துக்குப் புரம்பான புத்தர் முதலியவர்களின் வாக்கியங்களையும் இது விஷயத்தில் நம்மவர்கள் உதாஹரித்திருக்கிறுர்கள். தந்திர வார்த்திகத்தில் அநுவாதம் செய்யப்பட்ட புத்த வாக்கியம்.

𑌕𑌲𑌿𑌕𑌲𑍁𑌷𑌕𑍃𑌤𑌾𑌨𑌿 𑌯𑌾𑌨𑌿 𑌲𑍋𑌕𑍇,
𑌮𑌯𑌿 𑌨𑌿𑌪𑌤𑌨𑍍𑌤𑍁 𑌵𑌿𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑌾𑌂𑌹𑌿 𑌲𑍋𑌕𑌃 ।

கலியின் தோஷத்தினுல் உலகத்தில் உண்டாகு மவைமெல்லாம் என்னிடத்தில் குவியட்டும். எப்படியாவது உலகம் விடுதலை பெறட்டும். என்று.

அப்படியே பாஸ்கர பாஷ்யத்தில் புத்த வாக்கியம்

𑌏𑌕𑌸𑍍𑌯𑌾𑌪𑌿 𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌰𑍍𑌯𑌾𑌵𑌚𑍍𑌚 𑌯𑌾𑌵𑌦𑍇𑌵𑍍𑌯𑌵𑌚𑍍𑌛𑍇𑌦𑌃 𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌃 ।
𑌤𑌾𑌵𑌨𑍍𑌨𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌮𑌿𑌚𑍍𑌛𑌾𑌮𑌿 𑌲𑍋𑌕𑌵𑌾𑌵𑌾𑌨𑌿 𑌨𑌿𑌵𑍃𑌤𑌃 ।

ஆகாசமும் பூமியும் எவ்வளவு காலம் ஸ்திரமாயிருக்குமோ அவ்வளவு காலம் நானும் நிலைத்திருந்து உலகத்தாரின் பாவங்களை யெல்லாம் நானே திரட்டிக்கொள்ளக்கடவேன், என்று எடுத்துரைக்கப்பட்டது.

காவியம் நாடகம் முதலியவைகளை இயற்றிய மஹாகவிகளும் இந்த அபிப்பிராயத்தைப் பலவாருகப் பேசியிருக்கிருர்கள். நாகாநந்த நாடகத்தில்,

𑌶𑌯𑍍𑌯𑌾 𑌶𑌾𑌦𑍍𑌵𑌲𑌮𑌾𑌸𑌨𑌂 𑌶𑍁𑌚𑌿𑌶𑌿𑌲𑌾' 𑌸𑌦𑍍𑌮 𑌦𑍍𑌰𑍁𑌮𑌾𑌣𑌾𑌮𑌧𑌃 ।
𑌶𑍀𑌤𑌂 𑌨𑌿𑌰𑍍𑌝𑌰𑌵𑌾𑌰𑌿𑌪𑌾𑌨𑌮𑌶𑌨𑌂 𑌕𑌨𑍍𑌦𑌾𑌸𑍍𑌸𑌹𑌾𑌯𑌾 𑌮𑍃𑌗𑌾𑌃 ।
𑌇𑌤𑍍𑌯𑌪𑍍𑌰𑌾𑌰𑍍𑌥𑌿𑌤𑌲𑌭𑍍𑌯 𑌸𑌰𑍍𑌵𑌵𑌿𑌭𑌵𑍇𑌦𑍋𑌷𑍋𑌽𑌯𑌮𑍇𑌕𑍋 𑌵𑌨𑍇 𑌦𑍁𑌷𑍍𑌪𑍍𑌰𑌾𑌪𑌾𑌰𑍍𑌥𑌿𑌨𑌿 𑌯𑌤𑍍 𑌪𑌰𑌾𑌰𑍍𑌥𑌘𑌟𑌨𑌾 𑌵𑌨𑍍𑌧𑍍𑌯𑍈𑌰𑍍𑌵𑍃𑌥𑌾 𑌸𑍍𑌥𑍀𑌯𑌤𑍇 ।

இளம்பசும்புல்த்தரை படுக்கையாயும் பரிசுத்தமான சிலையே ஆஸனமாயும் மரங்களின்கீழ் வசிக்குமிடமாயும் சீதலமான அருவியின் ஜலம் பானமாயும் கிழங்குகள் ஆகாரமாயும் மான்கள் சிநேகிதர்களாகவும் இப்படி நாம் ஆசைப்படாமலே கிடைக்கக்கூடிய எல்லா வைபங்களையுமுடைய ஆரண்யத்தில் ஒரு பெரியதோஷம் இருக்கிறது. அதாவது ? இங்கு நம்மை யாசிப்பவர்களே கிடையாது. அயலாருக்கு உபகாரம் செய்யக்கூடிய காரியலேசமுமில்லை. ஆகையால் இவ்விடத்தில் நாமிருப்பது மிகவும் வீணே, என்னப்பட்டது.

இந்த வாக்கியங்களால் பகவானை இசையாதவர்களும் லோகோபகாரமே செய்யவேண்டுமென்னும் போது ஸர்வஜகத்தையும் தனது உடலாகக்கொண்டிருக்கும் ஸர்வேசுவரனை ஒப்புக்கொண்ட ஆசாரியர்கள் இப்படி உபதேசிப்பது ஆச்சரியமல்லவென்று புலப்படுகிறது.

நம் பூர்வாசாரியர்களில் ஸ்ரீ ஆளவந்தார்,

𑌨 𑌦𑍇𑌹𑌂 𑌨 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌨𑍍 𑌨𑌚 𑌸𑍁𑌖𑌮𑌶𑍇𑌷𑌾𑌭𑌿𑌲𑌷𑌿𑌤𑌂,
𑌨 𑌚𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌨𑌾𑌨𑍍𑌯𑌤𑍍 𑌕𑌿𑌮𑌪𑌿 𑌤𑌵 𑌶𑍇𑌷𑌤𑍍𑌵 𑌵𑌿𑌭𑌵𑌾𑌤𑍍 ।
𑌬𑌹𑌿𑌰𑍍𑌭𑍂𑌤𑌂 𑌨𑌾𑌥 𑌕𑍍𑌷𑌣𑌮𑌪𑌿 𑌸𑌹𑍇 𑌯𑌾𑌤𑍁 𑌶𑌤𑌧𑌾 ।
𑌵𑌿𑌨𑌾𑌶𑌂 𑌤𑌤𑍍 𑌸𑌤𑍍𑌯𑌂 𑌮𑌧𑍁𑌮𑌥𑌨 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌪𑌨𑌮𑌿𑌦𑌂 ॥

தேவரீருடைய கைங்கரியமென்னும் ஐசுவரியம் கிடைத்ததினுல், என் தேஹம் பிராணங்கள் ஸுகங்கள் விரும்பத்தக்கவை யெல்லாம் என்ஆத்மாவும் மற்றும் எல்லாம் இவையொன்றையும் நான் வைத்துக்கொள்ள ஸஹிக்கமாட்டேன். தேவரீருக்குப் புறம்பான அவை யெல்லாம் நூற்றுக்கணக்கான நாசங்களை யடையட்டும். ஓ மதுஸூதனனே ! அக்ஞானத்தையொழிப்பவனே ! இதுதான் தேவரீரிடத்தில் என் விண்ணப்பம். இது ஸத்தியம், என்றருளிச் செய்தார். இவ்விடத்தில் சேஷத்துவ (கைங்கரிய) சப்தத்தைப் ராமர் சித்தால் ஸகலத்தையும் பகவானுக்குஸமர்ப்பிவித்து அவன் திருவுள்ளம்படி வினியோகிக்கப்படும்படி விட்டுவிடும்பக்ஷத்தில் எல்லா ஐசுவரியங்களும் வேண்டியவைதான். இல்லாவிட்டால் எல்லாமும் அருவருக்கத்தக்கவையே (ஹேயமே) என்று தாற்பரியமாகிறது. இவ்வர்த்தத்தை ஸ்ரீ ராமாநுஜ பகவானும் கீதா பாஷ்யத்தில்,

யஜநம் நாம பரிவர்ணதுஷெஷவரூத்திः ।

என்பது முதலான வாக்கியங்களால் வெளியிட்டருளினுர். நமः என்பதின் அர்த்தமும்அர்ப்பணம், என்பதுதான். ஆத்மாவையே ஸமர்ப்பிவிக்கும்போது ஆத்மீயங்களுடைய (தனக்கு சொந்தமானவைகளினுடைய) ஸமர்ப்பணமும் தானே சேர்ந்து வரவேண்டுமென்பதைக் கேட்பானேன், என்று தாற்பரியம்.

ஆகையால் உலகத்தின் நன்மையில் முடிவுபெறும்படியான ஆத்மகுண பூர்த்தியென்கிறது தைவீசம்பத்தை அபிவிருத்தி செய்வதான பகவதாராதனம், என்று ஸாரதமமான அர்த்தம்.

[முக்கடன் தீர்த்தல்.]

உலகத்தில் பிறந்து சாஸ்திரத்துக்கு அதிகாரியாகும் மனிதன் பிறக்கும்பொழுதே மூன்றுவிதக் கடன்களோடு உண்டாகின்றுன், என்று சாஸ்திரங்கள் சொல்லுகின்றன. அம் மூன்றுகடன்களும் தீர்ந்த பிறகே மோக்ஷத்தைக் குறித்துப் பிரயத்தினம் செய்யவேண்டுமென்று மனு முதலிய ரிஷிகள் உபதேசிக்கிறுர்கள்.

ஜாயமாநோ வை ப்ராஹ்மணः த்ரிபிர்ருணவாந் ஜாயதே ॥

𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌚𑌰𑍍𑌯𑍇𑌣 𑌋𑌷𑌿𑌭𑍍𑌯𑌃 । 𑌯𑌜𑍍𑌞𑍇𑌨 𑌦𑍇𑌵𑍇𑌭𑍍𑌯𑌃 । 𑌪𑍍𑌰𑌜𑌯𑌾 𑌪𑌿𑌤𑍃𑌭𑍍𑌯𑌃 ।

𑌋𑌣𑌾𑌨𑌿 𑌤𑍍𑌰𑍀𑌣𑍍𑌯𑌪𑌾𑌕𑍃𑌤𑍍𑌯 𑌮𑌨𑍋 𑌮𑍋𑌕𑍍𑌷𑍇 𑌨𑌿𑌵𑍇𑌶𑌯𑍇𑌤𑍍 ।
𑌅𑌨𑌪𑌾𑌕𑍃𑌤𑍍𑌯 𑌮𑍋𑌕𑍍𑌷𑌨𑍍𑌤𑍁 𑌸𑍇𑌵𑌮𑌾𑌨𑌃 𑌪𑌤𑌤𑍍𑌯𑌧𑌃 ।

என்று.

பிருஂமசரியத்தினுல் ரிஷிகளின்கடனேயும் யாகத்தால் தேவர்களின் கடனேயும் பிரஜையினுல் பிதிருக்களுடைய கடனேயும்தீர்க்க வேண்டும். இக்கடன்களேத் தீர்க்காமல் மோக்ஷத்தில் பிரயத்தினம் செய்கிறவன் அதோகெதியில் விழுகிருன், என்னப்பட்டது இவற்றில் முதலாவதான பிரும்சரியமாவது வித்தியாப்பியாஸம் இவ்வித்தியாப்பியாஸமானது ரிஷிகளால்.

𑌵𑍇𑌦 𑌸𑍍𑌵𑍀𑌕𑌰𑌣𑌂 𑌪𑍂𑌰𑍍𑌵𑌂 𑌵𑌿𑌚𑌾𑌰𑍋𑌽𑌭𑍍𑌯𑌸𑌨𑌂 𑌜𑌪𑌃 ।
𑌤𑌦𑍍𑌦𑌾𑌨𑌂 𑌚𑍈𑌵 𑌶𑌿𑌷𑍍𑌯𑍇𑌭𑍍𑌯𑍋 𑌵𑍇𑌦𑌾𑌭𑍍𑌯𑌾𑌸𑍋 𑌹𑌿 𑌪𑌂𑌚𑌧𑌾

(தக்ஷர்)

முதலில் வேதத்தை கிரஹித்தல். பிறகு அதை விசாரம்பண்ணுதல். உருப்போடுதல். ஜபித்தல். சிஷ்யர்களுக்கு உபதேசித்தல், என்று வித்தியாப்பியாஸம் ஐந்து வகைப்படும், என்றும்.

𑌅𑌧𑍍𑌯𑌾𑌪𑌨𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌯𑌜𑍍𑌞𑌃 𑌪𑌿𑌤𑍃𑌯𑌜𑍍𑌞𑌸𑍍𑌤𑍁 𑌤𑌰𑍍𑌪𑌣𑌂 ।
𑌦𑍈𑌵𑍋 𑌹𑍋𑌮𑌃 𑌬𑌲𑌿𑌰𑍍𑌭𑍌𑌤𑌃 𑌨𑍃𑌯𑌜𑍍𑌞𑍋𑌽𑌤𑌿𑌥𑌿𑌪𑍂𑌜𑌨𑌂 ।

(மனு)

பிருஂமயக்ஞம் என்பது வேதத்தைப் படித்தல். பிதிருயக்ஞம் தர்ப்பணம். தேவயக்ஞம் ஹோமம். பூதயஞ்ஞம்பலி. மனுஷ்யயக்ஞமென்பது அதிதி போஜனம் செய்வித்தல், என்றும் சொன்ஞர்கள். இதில் அத்தியாபனம் (வேதத்தைப்படித்தல்) என்கிற பதம் கெவனிக்கத்தக்கது. இதனுல் ரிஷிகளுக்குப் பட்ட கடன் தீருகின்றது. தேவர்களின் கடன் யக்ஞம் முதலியவைகளால் தீர்க்கப்படுகின்றது. அவையாவன ?

𑌤𑍍𑌰𑍈𑌵𑌾𑌰𑍍𑌷𑌿𑌕𑌾𑌧𑌿𑌕𑌾𑌨𑍍𑌨𑍋𑌯𑌃 𑌸𑌤𑍁 𑌸𑍋𑌮𑌂 𑌪𑌿𑌬𑍇𑌤𑍍 𑌦𑍍𑌵𑌿𑌜𑌃 ।

வ்ராத்ய ஸோமைரீஜே க்ரியாச் சதுஷ்ப்ரகார யஸ்யாம் வாஷட்கம் ஸஹஸ்ரம் |
தக்ஷிணா ஸர்வாஸ்யம்ருதா நாம் தாதவ்யம் ஸம்பரிகீர்த்திதா |
இதி ஸாங்க்யாயநச்ரௌதஸூத்ர வ்யாக்யாநாதேஷி ப்ரோக்தம் |
விச்வஜிதா யஜேத |

மூன்றுவருஷம் அதற்கு அதிகமானது, ஒருவருஷம், இப்படி அன்ன தானங்கள் செய்யப்படவேண்டிய யாகங்கள் மிகுந்த தக்ஷிணைகளைக் கொடுத்துச் செய்யப்படவேண்டுமென்றும் விச்வ ஜித், அதாவது தன் பொருளனைத்தையும் பிறர்க்குக் கொடுத்து விடவேண்டிய யாகங்களைச் செய்யவேண்டுமென்றும் சொல்லப் பட்டன. இவ்வித யாகங்களினால் லோபகுணத்தை ஒழித்து பணத்தைப் பிறர்விஷயத்தில் தாராளமாகச் செலவு செய்யவேண்டு மென்றும் உபதேசிக்கப்பட்டது.

பிதிருக்களின் கடன் கிருஹஸ்தாச்ரமத்தை ஏற்று புத்திர ஸந்ததி உண்டுபண்ணுவதால் தீருகிறது என்றும், புத்திரஸந்ததி ஸ்வரூபம் இன்னவிதமாக இருக்கவேண்டுமென்றும் வேதத்தில் சொல்லப்பட்டது. சதபதப் பிராம்மணத்தில்,

தஸ்மாத் புத்ரம் அநுசிஷ்டம் லோக்யமாஹு: | தஸ்மாதேநமநுசாஸதி | ஸபுத்ரவாநஸ்மிந் லோகே ப்ரதிதிஷ்டதி | இதி

ஆகையால், நன்றாய் கற்பிக்கப்பட்ட புத்திரனே உலகத்தின் நன்மையின் பொருட்டு ஆகிறான், என்றார்கள். ஆகையால் இவனுக்கு நல்ல புத்திரனையுடையவன் இந்த லோகத்தில் ஸ்திரமாக இருக்கிறான் என்று உபதேசம் செய்கிறது. என்று சொல்லப்பட்டது இதனால் புத்திரனை உண்டுபண்ணுவதால் மட்டும் பிதிருக்களின் கடன் தீராது ஆனால் அவனைச் சரியாக சிக்ஷைசெய்து உலகத்துக்கு ஹிதத்தைச் செய்யும்படி யாக்கினால் தான் தீரும், என்றதாயிற்று.

இப்படி முக்கடன் தீர்ப்பதும் லோக ஆராதனமே ஆகிறது.

[புஷ்பாஞ்சலி சமர்ப்பணம்]

பகவ தாராதனம் கேவல பத்திரம் புஷ்பம் பலம் முதலா னவைகளைச் சமர்ப்பிவித்துச் செய்யப்படுவதைக் காட்டிலும் இந்த மாதிரி பரோபகாரரூபமாகச் செய்யப்படவேண்டிய பிர காரங்கள் எல்லா சாஸ்திரங்களிலும் காணப்படுகிறது. இதன் விவ ரம் ஸ்ரீ பாகவதத்தில்,

வஶ்யைதாந் ஊஹாஹாமாந் வராயெகாஞ ஜீவி தாந் | வாதவஷாதவஹிமாந் ஸஹெஞா வாரயஜிநஃ | கஹொஹொஷாං வரං ஜந்ந ஸவ ப்ராண்யுவஜீவநம் | ஸுஜ நஸ்யெவயெஷாං வெ விஓவாயாஜி நாகிநஃ | வத்ரவுஷு ஹலச்சாயா ஓலவல்கல தாரூஹிஃ | ஗நியாஸ ஹஸ்மாஸ்தி தொக்கஃ காஓாந் விதநூதெ | ஊதாவஜ் ஜநஸாஹல்யං ப்ராணி நாஓிஹ ஜீவதாං | ப்ராணைரத்தெயிதியாவாவாஸ்ரெய ஆ வரணං ஸதா | வத்ரං புஷ்பம் ஹலம் தொயம் யொஒெஹக்த்யா வ்ரயஸ்ரதி | தஒஹம் ஹக்த்யுவஹ்ருதம் கஶ்நாஓி வ்ரயதாத்மநஃ|

மஹாபாக்கியசாலிகளான இந்தவிருக்ஷங்களைப்பாருங்கள். அவை கள் பிறர்கென்றே ஜீவித்திருக்கின்றனவன்றோ? அதற்காககாற்று வெயில் மழை பனி முதலியவற்றை ஸஹித்து அவைகளினின்றும் நம்மைக் காப்பாற்றுகின்றனவன்றோ? எல்லாப் பிராணிகளுக்கும் உபகாரம் செய்துகொண்டு வாழும் இவைகளின் உயர்ந்த வாழ்வே வாழ்வு இவைகளிடமிருந்து யாசகர்கள் பணக்காரனிடத்தி லிருந்து திரும்புவதுபோல முகங்கோணி நிராசையாய் திரும்புவ தில்லையே? இலை புஷ்பம் பழம் நிழல் வேர் மரவுரிகட்டைவாசனை பால் சாம்பல் கரி கன்று முனை, இவை யெல்லாவற்றாலும் பிராணி களின் ஆசைகளை நிறைவேற்றுகின்றனவன்றோ? இப்படிகளி லன்றோ உயிரோடிருக்கும் பிராணிகளின் ஜன்மம் ஸபலமாக வேண்டும்? தன் பிராணன்களாலும் திரவியங்களாலும் புத்தியினு லும் வாக்கினாலும் எப்போதும் பிறர்க்கு நன்மையையே புரிந்து கொண்டிருக்க வேண்டும்.

இலை பூ பழம் தண்ணீர் இவைகளில் எதையும் எவன் பக்தி யோடு எனக்கு ஸமர்ப்பிக்கிறானோ, அந்த உண்மையான பக்தன்

கொடுப்பதை நான் ஸந்தோஷமாக புஜிக்கிறேன், என்று வெகு அழகாக பிரதிபாதிக்கப்பட்டிருக்கிறது.

இப்படிப்பட்ட புஷ்பங்களில் விசேஷமானவையும் பகவானுக்கு மிகவும் பிரீதிகரமானவையும் இவைதான் என்னப்பட்டது அவையாவன ?

அஹிம்ஸா ப்ரதமம் புஷ்பம் புஷ்பமிந்த்ரிய நிக்ரஹ: |
ஸர்வபூததயா புஷ்பம் க்ஷமா புஷ்பம் விசேஷத: |
சாந்தி: புஷ்பம் தப: புஷ்பம் த்யானம் புஷ்பம் ததைவ
ச |
ஸத்யமஷ்டவிதம் புஷ்பம் விஷ்ணோ: ப்ரீதிகரம் பவேத் |

பகவானை விஷ்ணுவுக்கு மிகுந்த பிரீதியைச் செய்யும் புஷ்பங்களில் முதலானது அஹிம்ஸை. அடுத்தது இந்திரியங்களை ய குதல். மேல் புஷ்பம் எல்லாப் பிராணிகளிடத்தும் தயை கா தல். பொறுமை ஒரு உயர்ந்த புஷ்பம். மற்றவை சாந்தி தப தியானம் ஸத்தியம், ஆகிய இவை. இப்படிப் புஷ்பங்கள் எ வகைப்பட்டன, என்று. அத்தகைய பகவானிடத்தில் நான் ெ வது யாவையும் சாப்பிடுவதையும் ஹோமம் செய்வதையும் த என்று செய்யப்படு மவையையும் அர்ப்பணம் செய்து விடுகிறே

யத்கரோஷி யதச்நாஸி யஜ்ஜுஹோஷி ததாஸி யத் |
யத்தபஸ்யஸி கௌந்தேய தத்குருஷ்வ மதர்ப்பணம் ||

ஸ்ரீ க்ருஷ்ணார்ப்பணமஸ்து
ஸ்ரீ:

